# NEW
# ROCHE TAMIL VASAGAM

## FOURTH BOOK




S. MUTHIAH,
St. Xaveir's High School,
TUTICORIN.

A. V. D. PACKIAM PILLAI
EDUCATIONAL PUBLISHER
ICORIN :: TIRUNELVELI



Price Annas 8.

புதிய

# ரோச் தமிழ் வாசகம்

## (நான்காம் புத்தகம்)

நான்காம் வகுப்பு





ஆசிரியர்,

வடவை. S. முத்தையா

அர்ச். சவேரியார் உயர்தர கலாசாலை,

தூத்துக்குடி



பதிப்பாளர்:

A. V. D. பாக்கியம் பிள்ளை

தூத்துக்குடி :: திருநெல்வேலி


 1945 [விலை 8 அணா

# முன்னுரை

'புதிய ரோச் தமிழ் வாசகம்' என்னும் இப்புத்தக வரிசை 1939-ம் ஞு புதிய பாடத்திட்டத்தை அனுசரித்து எழுதப்பட்டிருக்கிறது.

இவ்வாசக வரிசைப் புத்தகங்களில் பிள்ளைகளின் தகுதிக் கேற்றனவாகவும், அவர்கள் விரும்பிக் கற்கத் தக்கவையாகவும், அவர்களுக்கு உலக அறிவு, இயற்கைப் பொருள் ஞானம், நீதி முதலியவற்றைப் புகட்டக்கூடியனவாகவும், இந்நாட்டுப் பழக்க வழக்கங்களுக்கு உட்பட்டனவாகவுமுள்ள பாடங்கள் அமைந்திருக்கின்றன.

தவிர, பிள்ளைகளின் மனத்தைக் கவரத்தக்க அழகிய இனிமையான பாடல்கள் ஆங்காங்குச் சேர்க்கப்பட்டுள்ளன. பாடங்களை விளக்க ஏற்றவையான படங்களும் ஆங்காங்குக் கொடுக்கப்பட்டுள்ளன. பிள்ளைகளின் சிந்தனைச் சக்தியை அதிகப்படுத்தவும், படித்த பாடத்தை மனத்தில் பதியச் செய்யவும், ஞாபக சக்தியை விருத்திசெய்யவும், பிள்ளைகள் தங்கள் எண்ணங்களைத் தட்டுத் தடுமாருமல் பிழையில்லாத சிறு வாக்கியங்களின் மூலம் வெளியிடக் கற்றுக்கொள்ளவும் அனுகூலமாக இருக்கும்படிப் போதுமான கேள்விகளும் பயிற்சிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வரிசைப் புத்தகங்கள் பிள்ளைகளைத் தமிழ் மொழியில் தேர்ச்சிபெறச் செய்து அவர்களை ஒழுக்கத்திலும் உலக அறிவிலும் உயர்ந்தோராகச் செய்யும் என்று நம்புகிறேன்.

இவ்வாசகத்தில், கயிறு திரித்தல், நீர்த்துளியின் கதை, தபால் கடிதம் சொன்ன கதை என்ற இம்மூன்று பாடங்களையும் யெழுதித்தந்த திரு. P. R. இராச சூடாமணி அவர்களுக்கும், கருதிவாழ், தேன், கடற்காற்று என்ற இம்மூன்று பாட்டுக்களை இப்புத்தகத்திற்கு என்றே எழுதிக்கொடுத்த வித்வான் திரு. S. உமைதாணுப் பிள்ளையவர்களுக்கும், ஆறு என்னும் செய்யுட் பகுதியைச் சேர்த்துக் கொள்ள அனுமதியளித்த திரு. சி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்களுக்கும் இப்புத்தகத்தை அச்சிடுங்கால் உதவிசெய்த வித்துவான்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

S. முத்தையா

# பொருளடக்கம்



## செய்யுள்

புதிய

# ரோச் தமிழ் வாசகம்

## நான்காம் வகுப்பு



## 1. வைகறைத் துயிலெழு

| | | |
|---|---|---|
| கதிரவன் | குணதிசை | வாவி |
| பகவன் | மக்கள் | ஆரோக்கியமாக |
| வைகறை | துயில் | வற்புறுத்துகிறது |
| ஏற்ற | உறுதியுறும் | அன்றேடம் |
| அளிக்கும் | பொழுது | துதிக்க |

'காவெனக் காகங் கரைவதைக் கேட்பாய் !
கதிரவன் குணதிசை காண்பதைப் பார்ப்பாய் !
வாவியில் தாமரை மலர்வதைப் பார்ப்பாய் !
படுக்கைவிட்டெழுந்திரு பகவனைத் தொழுவோம்.'

'காகம் கா-கா வென்று கரைவதைக் கேள். சூரியன் கிழக்குத் திசையில் உதிப்பதைப் பார். குளத்தில் தாமரை மலர்வதைப் பார். படுக்கையை விட்டு எழுந்திரு. கடவுளைத் தொழுவோம்' என்று கூறி ஒரு பெரியார் தம் மக்களை அதிகாலையில் எழுப்புகிறார்.

உங்களையும் உங்கள் பெற்றோர் அதிகாலையில் எழுப்புகிறார்கள் அல்லவா ? அப்பொழுது அவர்கள் என்ன கூறி உங்களை எழுப்புகிறார்கள் ? அதிகாலையில் தூக்கத்தை விட்டு எழுந்திருத்தல் மிகவும் நல்ல வழக்கமாகும். இவ்வித வழக்க முடையவர்கள் ஆரோக்கியமாக வாழ்வார்கள். ஔவையார்

'வைகறைத் துயிலெழு' என்று கூறியுள்ளார். இவ்வாக்கியம் அதிகாலையில் தூக்கத்தைவிட்டு எழுந்திருக்கவேண்டும் என்பதை வற்புறுத்துகிறது அல்லவா ?

காலை வேளையே கற்பதற்கு ஏற்ற வேளை. அப்பொழுது கற்கும் கல்வி மனத்தில் நன்ருகப் பதியும். தவிர, காலைவேளையில் சோம்பல் நீங்கிச் சுறுசுறுப்பாக இருக்கும். ஆகையால், படிக்கும் பிள்ளைகளாகிய நீங்கள் தினம் அதிகாலையில் தூக்கத்தை விட்டு எழுந்து உங்கள் பாடங்களைக் கற்கவேண்டும். அதிகாலையில் எழுந்திருப்பதால், அடையக்கூடிய நன்மைகளை

'புத்தி யதற்குப் பொருந்து தெளிவளிக்கும்
உற்ற நரம்பென்றும் உறுதியுறும்-பித்தொழியும்
தாலவழி வாதபித்தம் தத்தநிலை மன்னும்அதி
காலைவிழிப் பின்குணத்தைக் காண்'

என்ற செய்யுள் விளக்குவதைக் கவனியுங்கள்.

அதிகாலையில் எழுந்திருக்கும் ஒருவர் தமது அன்ருட வேலைகளைக் குறைவின்றிச் செய்துமுடிக்கக்கூடும். பொழுதொடு படுக்கச்சென்று, பொழுதொடு எழுந்திருப்பது தேகசுகத்தை அளிக்கும். சிலர் முன்னிரவில் அதிக நேரம் விழித்திருந்து, காலையில் வெகுநேரம் கழிந்த பின்னர் விழிப்பதுண்டு. இது மிகவும் கெட்ட வழக்கம். சிலர் அதிகாலையில் விழித்துக் கொண்ட போதிலும், படுக்கையில் கிடந்து புரண்டுகொண்டே பொழுது போக்குவார்கள். இவ்விதம் செய்வது தவறு.

அதிகாலையில் எழுந்ததும் கடவுளைத் துதிக்க வேண்டும். அன்று நாம் செய்யவேண்டிய காரியங்களை ஆலோசித்துக்கொண்டு தொடங்கவேண்டும்

இரவில் படுக்கும் போதும் கடவுள் வணக்கம் செய்ய வேண்டும். தவிர கடவுள் ஒருவர் உண்டு என்ற எண்ணம் எப்பொழுதும் மனத்தில் இருக்கவேண்டும்.

## கேள்விகள்

1. அதிகாலையில் எழுந்திருக்கவேண்டும் என்பதை வற்புறுத்த ஔவையார் கூறியுள்ள வாக்கியம் என்ன?

2. அதிகாலையில் எழுந்திருப்பதால் ஏற்படும் நன்மைகள் எவை?

3. அதிகாலையில் எழுந்தவுடன் என்ன செய்யவேண்டும்?

## பயிற்சி

1. காகம் சத்தமிடுவதைக் 'காகம் கரைகிறது' என்று சொல்லுகிறோம். அதுபோல் சேவல், கிளி, ஆந்தை இவை சத்தமிடுவதை எவ்விதம் சொல்லவேண்டும்?

2. உதிக்கிறது, நன்மை, காலை—எதிர்ப்பதம் என்ன?

3. அன்றாடம்—சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுது.

## இலக்கணம்

'குளம்'—இது மூன்று எழுத்துக்களுள்ள ஒரு சொல். இச்சொல்லிலுள்ள எழுத்துக்களை 'ம்ளகு', 'ளகும்' என்று மாற்றி எழுதினால் அர்த்தம் விளங்கவில்லை அல்லவா?

ஈ—இது ஓர் எழுத்து. ஈ என்பது 'ஈ' என்னும் ஜந்துவைக் குறிக்கும்பொழுது ஒரு சொல் ஆகும். ஈ, பூ, தா, வா—இவை தனித்தனி ஓரெழுத்துச் சொற்கள்.

எழுத்துக்கள் தனித்தாவது அல்லது பல சேர்ந்தாவது அர்த்தம் விளங்க நின்றால் சொல் ஆகும்.

தாமரை, ஔவையார், காலை—இவை ஒவ்வொன்றிலும் எத்தனை எழுத்துக்கள் இருக்கின்றன?

ஆறு எழுத்துக்களுள்ள சொற்கள் இரண்டு எழுது.

---




## 2. தானியங்கள்

| | | |
|---|---|---|
| சேறு | வெகுவாய் | சுரக்கும் |
| செம்மை | சத்துள்ள | தரிசாக |
| பசுந்தாள் | ஏற்ற | சாகுபடி |
| அக்கறை | பலவினர் | பிரசாரம் |
| கார்ப்பயிர் | வியாதியஸ்தர் | யோசனை |
| களஞ்சியம் | வண்டல் | வெகுமதி |
| வர்த்தகர் | அபரிமிதமான | அளிக்கிறார்கள் |

உபாத்தியாயர் :—பிள்ளைகளே, நாம் உண்ணும் உணவுக்கான தானியங்கள் பலவகைப்படும். சில வகைகளைப் பற்றியாவது நாம் அறியவேண்டியது மிகவும் அவசியம். இந்தப் படத்தில் ஐந்து வகையான தானியக் கதிர்களைப் பார்க்கிறீர்கள் அல்லவா? ரங்கா! நீ இங்குள்ள நெல் கதிரைக் காட்டு.

ரங்கன் :—கடைசியில் இருப்பது நெல். இந்தத் தானியத்தை நாம் அடிக்கடி பார்க்கிறோம். கடைகளுக்கு நெல் எங்கிருந்து, எப்படி வருகிறது?

உபா :—

ஆற்றூர் வயலில் அழகன் உழவன்
சேற்றைக் கலக்கிச் செம்மைப் படுத்திப்

பக்குவ முடனே பசுந்தாள் எருவும்
அக்கரை யோடே ஆவின் சாணமும்
வயலில் போட்டு வரப்பும் வெட்டி
நயமுடன் உழுது நல்நெல் வித்தி
நாற்பதாம் நாளில் நாற்றுப் பிடுங்கி
நன்செய் நிலமெலாம் நன்கு நட்டான்
வான மழையும் வல்ல செஞ்சுடரும்
போனகப் பயிரைப் போற்றி வளர்க்க,
ஆற்று நீரும் காற்றுஞ் சேர்ந்து
நாற்றை வளர்க்க, நற்கதிர் ஈன்று
தாள்கள் ஓங்கித் தலையுஞ் சாய
ஆள்கள் வந்தனர் அரிவாள் கொண்டு
கார்ப்பயிர் அறுத்துக் களத்தினில் அடித்துச்
சீரிய நெல்லை திரட்டிக் குவித்தார்
அழகன் அதனைக் களஞ்சியஞ் சேர்த்தான்
பழகிய இவனதைப் பணத்துக்குக் கேட்டான்
ஆதலின் அழகன் ஆயிரம் மூட்டைகள்
வர்த்தகற்குப் புகை வண்டியில் அனுப்ப
பெற்றதை இவனே விற்றதின் லாபம்
எடுப்பான் நிரம்ப இதுவே நெற் கதை.

**தாசன்** :—ஐயா, முதலில் இருப்பது தானே சோளம் ?

**உபா** :—ஆம் அப்பா, இது இந்த ஊரில் அதிகமாக விளைகிறது. சோளத்தின் கதிர் பெரியதாய் உருண்டு, திரண்டு இருக்கும். அக்கதிர்கள் விளைந்தும் விளையாமலும் இருக்கையில், அவற்றிலுள்ள தானியங்களைத் தின்னக் குருவிகள் கூட்டங் கூட்டமாய் வரும். அவைகளைத் தோட்டக்காரர் விரட்டுவார்கள்.

**ஜான்** :—இரண்டாவது இருப்பது என்ன தானியம், ஐயா ?

உபா :—அதன்பெயர் கம்பு. இது ஒரு சத்துள்ள உணவு. கம்பங் கதிர் நீண்டு உருண்டு இருக்கும். இத் தானியத்தை உரலில் இட்டுக் குற்றி உமியைப் போக்கி இடித்துச் சமைப்பார்கள். கம்பு ஏழைகளுக்கு ஏற்ற இனிய உணவு.

**சீனிவாசன்** :—ஐயா, கடுகு போல் சிறியதாய் உருண்டு, மங்கிய செந்நிற மாயிருக்கும் இந்தத் தானியத்தின் பெயர் என்ன ?

உபா :-சீனு, இத்தானியம் கேழ்வரகு எனப்படும். கேழ்வரகை மாவாகத் திரித்துக் கூழ் காய்ச்சுவது வழக்கம். இது பலவீனர்களுக்கும், வியாதியஸ்தர்களுக்கும் ஏற்ற உணவு.

**ஞானம்** :—ஐயா, அந்த நெல்லின் பக்கத்தில் இருக்கும் தானியத்தின் பெயரைத் தயவு செய்து தெரிவியுங்கள்.

உபா :—ஞானம், நெல்லின் பக்கத்தில் இருப்பது தினை. அது மலைப்பாங்கான பூமியிலும், வண்டல் உள்ள செழிப்பான நிலத்திலும் நன்ருய் வளரும். தினை மா மிகவும் உருசியுள்ளது. பசுக்கள் தினை உண்டால் அதிகமாகப் பால் கொடுக்கும். தினையும் மிகச் சத்துள்ளது. மற்றத் தானியங்கள் தற்சமயம் இங்கு இல்லை. நெல், சோளம், கம்பு, கேழ்வரகு, தினை, வரகு, சாமை, குதிரைவாலி, காடைக்கண்ணி என்னும் தானியங்கள் நமது உணவுக்கு உபயோகப் படுகின்றன. வட இந்தியாவிலுள்ளவர்கள் கோதுமையை முக்கிய உணவுப் பொருளாக உபயோகிக்கிருர்கள்.

ஆகையால், நாம் நிலத்தைத் தரிசாகப் போடாமல், சாகுபடி செய்துவர வேண்டும். நம் நாட்டு மக்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களை நாம் ஆங்காங்குள்ள மண்ணின் தன்மை, ஜலவசதி, சீதோஷ்ணம் முதலியவைகளைக் கவனித்துப் பயிரிட்டு வரவேண்டும். நம் நாட்டில் விளையும் உணவுப் பொருள்கள் நம் நாட்டு மக்களின் தேவைக்குப் போதுமானதாக இல்லாததால்தான் அரசாங்கத்தார் அதிகமான உணவுப் பொருள்களைப் பயிரிடுங்கள் என்று பிரசாரம் செய்து வருகிறார்கள்; விவசாயிகளுக்கு வேண்டிய உதவிகளையும் செய்து வருகிறார்கள். பள்ளிக்கூடத் தோட்டங்களில் தானிய வகைப் பயிர்களையும், காய்கறிச் செடிகளையும் பயிரிட்டு வரும்படி யோசனை கூறுகிறார்கள். சில ஜில்லாக்களில் பாடசாலைத் தோட்டங்களைப் பார்வையிட்டு, அதிகப்படியான உணவுப் பொருள்களைப் பயிரிட்டு வரும் பாடசாலைகளுக்கு வெகுமதி அளிக்கிறார்கள்.

பிள்ளைகளே, நீங்கள் உங்கள் பாடசாலைத் தோட்டத்தையும் தரிசாகப் போடாமல், உணவுப் பொருள்களைப் பயிரிட்டு வாருங்கள்.

### கேள்விகள்

1. உணவுக்கு உதவும் சில தானியங்களின் பெயர்களைக் கூறு.

2. உங்கள் ஊரில் என்னென்ன தானியங்கள் சாகுபடியாகின்றன?

3. நெல் எவ்விதம் பயிரிடப்படுகிறது?

4. இக்காலத்தில் அதிகமான உணவுப்பொருள்களைப் பயிரிடும்படி பிரசாரம் செய்துவருவது ஏன்?

### பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது:—
கடைசியில், அடிக்கடி, தற்சமயம், தரிசாக, உருண்டு,

2. எதிர்ப்பதம் எழுது:—அவசியம், பலவீனன், இறக்குமதி, ஏழை.

3. நெல்லின் பக்கத்தில் இருப்பது திணை.—இந்த வாக்கியத்தில் 'இருப்பது' என்னும் சொல்லுக்குப் பதில் வேறு வார்த்தையை உபயோகித்து வாக்கியத்தை மாற்றி எழுது.

## இலக்கணம்

1. உழவன் வயலை உழுகிறான்.
2. கடைக்கு நெல் எங்கிருந்து வருகிறது?

மேற்கண்ட ஒவ்வொன்றும் முடிந்த கருத்தைத் தெரிவிக்கின்றது. ஆகையால் ஒவ்வொன்றும் ஒரு வாக்கியம் ஆகும். முதல் வாக்கியத்தின் கடைசியில் இடப்பட்டுள்ள புள்ளிக்கு முற்றுப்புள்ளி என்று பெயர். அது, வாக்கியம் முடிந்துவிட்டது என்பதைத் தெரிவிக்கிறது. இரண்டாவது வாக்கியத்தின் கடைசியில் இடப்பட்டுள்ள குறிக்குக் கேள்விக் குறி என்று பெயர். இரண்டாவது வாக்கியம் கேள்விப் பொருளில் இருப்பதால் அதன் முடிவில் கேள்விக்குறி இடப்பட்டுள்ளது.

கீழ்க்கண்ட வாக்கியங்களின் முடிவில் தகுந்தபடி முற்றுப் புள்ளி அல்லது கேள்விக் குறியை இட்டு எழுது:—

1. குடியானவர்கள் விதை விதைக்கிறார்கள்
2. குடியானவர்கள் என்ன விதைகளை விதைக்கிறார்கள்
3. திணைமா மிகவும் உருசி உள்ளது
4. நீ எங்கேயிருந்து வருகிறாய்
5. உன் ஊரில் என்ன பயிர்கள் விளைகின்றன

---

# 3. கரும்பும் சர்க்கரையும்

| | | |
|---|---|---|
| பண்டிகை | நீர்ப்பாய்ச்சல் | ஏராளமாக |
| கருப்பங்கழி | வசதிகள் | சாறு |
| ஆவல் | வாய்ந்த | பாகு |
| ஆனந்தம் | பண்படுத்தி | பதார்த்தம் |
| கைக்கூலி | முளை | பெரும்பாலும் |
| வழங்குவது | கொழுந்து | பிரசித்தம் |
| கணுக்கள் | விற்பனை | முகத்துவாரம் |
| விருத்தி | ஆலை | தரம் |

பிள்ளைகளே, நீங்கள் கரும்பைத் தின்றிருப்பீர்கள். பொங்கல் பண்டிகையின்போது நமது ஊரில் கரும்பு இல்லாத கடை இராது. கருப்பங் கழியைச் சிறுவர் ஆவலோடு தின்பதற்குக் காரணம் என்ன? கருப்பங் கழி தின்பதற்கு மிகவும் தித்திப்பாக இருக்கும். ஆகையால், பெரியோர் முதல் சிறியோர் வரை கரும்பைத்தின்று ஆனந்தம் அடைகிறார்கள். 'கரும்பு தின்னக் கைக்கூலி வேண்டுமோ' என்று நமது நாட்டில் ஒரு பழமொழியும் வழங்குவது உண்டு.

கரும்பு ஒரு நன்செய்ப் பயிர். இதற்கு வண்டல் மண்ணும் அதிகத் தண்ணீரும் உஷ்ணமும் வேண்டும். ஆகவே, நெல் சாகுபடி யாகும் நிலங்களில் கரும்பைப் பயிர் செய்யலாம். ஆனால் கரும்பு பயிரிடப்படும் நிலத்தில் தண்ணீர் தேங்கி நிற்கக் கூடாது. கரும்பு பல கணுக்கள் உடையதாய் நீண்டு வளர்ந்து கழியாகிறது. அது எவ்வாறு பயிரிடப்படுகிறது என்பதை நீங்கள் அறிய ஆசைப்படுவீர்கள் அல்லவா? நன்றாய் முற்றின கரும்புகளை எடுத்து அவைகளைச் சில கணுக்களுள்ள சிறு சிறு துண்டுகளாக வெட்டுதல் வேண்டும். நல்ல நீர்ப் பாய்ச்சல் வசதிகள் வாய்ந்த நிலங்களைப் பண்படுத்தி, வரிசை வரிசை

யாகக் கரும்புத் துண்டுகளைப் புதைத்து விடல் வேண்டும். கணுக்களிலிருந்து சிறு முளை தோன்றிக் கொழுந்து இலைகள் காணப்படும். பிறகு ஒழுங்காகத் தண்ணீர் பாய்ச்சி வந்தால், அவை நன்ருய் வளர்ந்து



கரும்புத் தோட்டம்

வரும். சுமார் எட்டு அல்லது பத்து மாதங்கள் சென்ற பிறகு அவை வெட்டப்பட்டு விற்பனைக்கும் ஆலைக்கும் தயாராகின்றன.

ஏராளமாகக் கரும்பு விளையும் நாட்டில் கரும்பைத் தின்பதற்குமட்டும் உபயோகிக்கிறதில்லை. கருப்பங்கழிகளைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கி, அவைகளை ஆலையில் இட்டு ஆட்டுவார்கள். அப்பொழுது அவைகளிலிருந்து வடியுஞ் சாற்றைக் குடங்களில் பிடித்துக் கொப்பரைகளில் ஊற்றிக் காய்ச்சுவார்கள். கருப்பஞ் சாற்றிலுள்ள நீர் சுண்டியபின், அது குழம்பாகிப் பாகுபோலாகும். அதன்

பின்னர் அது சர்க்கரைக் கட்டிகள் ஆக்கப்படும். சர்க்கரை மிகவும் இனிய சுவை பொருந்திய பதார்த்தம். அது மிட்டாய் தினுசுகள் செய்வதற்கும், பலவித பலகாரங்கள் செய்வதற்கும், மருந்திற்கும் உதவும்.



கரும்பு ஆலை

நமது நாட்டில் பெரும்பாலும் கரும்பிலிருந்தே சர்க்கரை எடுக்கப்படுகிறது. மேல் நாடுகளில் கரும்பைத் தவிர, மற்றும் பலவிதப் பொருள்களிலிருந்தும், ஒருவகைக் கிழங்கிலிருந்தும் சர்க்கரை செய்யப்படுகிறது. முதன் முதல் இந்தியா தேசத்தில்தான் கரும்பு பயிராயிற்று. அது எங்கிருந்து இங்கு வந்ததோ நமக்குத் தெரியாது. ஆனால் நமது தேசத்திலிருந்தே கரும்பு மற்ற நாடுகளுக்குப் பரவிற்று என்பது பிரசித்தம்.

கங்கா நதியின் முகத்துவாரத்திற்கு அருகிலுள்ள பீஹார் மாகாணத்திலும் மற்றும் நமது சென்னை மாகாணத்தில் நீர்வளம் உள்ள கோதாவரி,

கிருஷ்ணு நதிகளின் டெல்டாப் பிரதேசங்களிலும் தென் ஆற்காடு, வட ஆற்காடு, சித்தூர், கோயம் புத்தூர், திருச்சி முதலிய ஜில்லாக்களிலும் கரும்பு ஏராளமாகப் பயிராகின்றது. பீஹார் மாகாணத்தில் கரும்பு ஆலைகள் அநேகமுண்டு. அவற்றில் வேலை செய்யும் ஆட்களும் அநேகர். பனைமரத்தின் பாளையைச் சீவி இறக்கப்படும் பதநீரிலிருந்து பனை வெல்லமாகிய கருப்புக்கட்டி யென்னும் தித்திக்கும் பொருளை உற்பத்தி செய்வது, திருநெல்வேலி ஜில்லாவின் முக்கியமான தொழில்களில் ஒன்ருயிருக்கிறது. அதுபோல, பீஹார் மாகாணத்தில் கரும்பு வெல்லமும், சீனியும் செய்வது முக்கியமான தொழில்களாகும்.

செங்கரும்பு, வெண்கரும்பு, நாமக்கரும்பு, ஆலைக் கரும்பு எனக்கரும்பில் நான்கு வகைகள் உண்டு. இந் நால்வகைக் கரும்புகளில் ஆலைக்கரும்பில் சர்க்கரைச் சத்து அதிகம். செங்கரும்பு அதற்கு அடுத்த தரமாகும். வெண்கரும்பிலும் நாமக்கருப்பிலும் நீர்ச்சத்து அதிகமிருக்கும்; தின்பதற்கு மெதுவாக இருக்கும். ஆலைக் கரும்பைத் தின்பதற்கு உபயோகிப்பதில்லை. ஏனெனில், அதன் மேற்ருேல் நாணல் தட்டைபோல் கடினமாயிருக்கும்.

**கேள்விகள்**

1. கரும்பு எவ்வித வசதிகளுள்ள இடங்களில் நன்ருக வளரும்?

2. கரும்பை எவ்விதம் சாகுபடி செய்கின்றனர்?

3. கரும்பில் என்னென்ன வகையுண்டு? அவைகளின் தன்மைகளைக் கூறு.

4. கரும்பு பயிரிடப்பட்ட எத்தனை மாதங்களுக்குப் பிறகு வெட்டப்படுகிறது?

5. சர்க்கரைக் கட்டிகள் எவ்விதம் செய்யப்படுகின்றன?

6. நமது மாகாணத்தில் கரும்பு பயிராகும் இடங்கள் எவை?

7. கருப்புக்கட்டி எவ்விதம் தயார் செய்யப்படுகிறது? இத்தொழில் எந்த ஜில்லாவில் அதிகம் நடைபெறுகிறது?

## பயிற்சி

1. ஆவல்—இதே அர்த்தம் தரும் வேறு வார்த்தைகள் எழுது.

2. எதிர்ப்பதம் எழுது:--இல்லை, பெரியோர், டை, கடினமாய்.

3. ஒரே அர்த்தமுள்ள வார்த்தைகளைக் குறிப்பிடு:—

| | |
|---|---|
| தித்திப்பாய் | சந்தோஷம் |
| ஆனந்தம் | வெட்டி |
| ஏராளமாக | வஸ்து |
| நறுக்கி | இனிப்பாய் |
| சுவை | அதிகமாக |
| பதார்த்தம் | ருசி |

4. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது:—

சிறு சிறு, வரிசை வரிசையாக, ஒழுங்காக, பெரும்பாலும்.

5. அநேகமுண்டு, மேற்றோல்—பிரித்து எழுது.

## இலக்கணம்

சிறுவர்கள் கரும்பைத் தின்கிறார்கள்.—இந்த வாக்கியத்தில் 'சிறுவர்கள், கரும்பை' என்பன பெயர்ச் சொற்கள். 'தின்கின்றார் கள்' என்பது வினைச்சொல். 'தின்கின்றார்கள்' என்னும் சொல்லை நீக்கிவிட்டால் வாக்கியத்தின் பொருள் முடிவு அடையாது. இந்த முற்றுவினை இவ்வாக்கியத்தின் பயனிலை ஆகும்.

'சிறுவர்கள்' என்ற சொல்லை எடுத்துவிட்டாலும் வாக்கியத் தின் பொருள் முடிவுபெறாது. இச்சொல் செயல் செய்கிறவர் களைக் குறிக்கிறது. இது இவ்வாக்கியத்தின் எழுவாய் ஆகும்.

சிறுவர்கள் எதைத் தின்கிறார்கள். இங்குச் சிறுவர்கள் கரும் பைத் தின்கிறார்கள். 'கரும்பை' என்பது இங்கே செயப்படு பொருள் எனப்படும்

வாக்கியத்தின் பொருளை முடிக்கும் சொல்லுக்குப் பயனிலை என்று பெயர்.

கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை, செயப் படு பொருள்களைக் குறிப்பிடு:—

1. குடியானவர்கள் பண்படுத்தின நிலத்தில் கரும்புத்துண்டு களைப் புதைக்கிறார்கள்.

2. பீஹார் மாகாணத்தில் கரும்பு ஏராளமாகப் பயிராகிறது.

# 4. வெளிச்சம்

| | | |
|---|---|---|
| இருள் | ஒப்பான | துலக்கமாய் |
| நீக்கி | எத்துணை | கப்பலோட்டி |
| மயங்கி | விண்மீன் | விண் |
| விபரீதம் | உருமாறி | இயங்குகின்ற |
| ஜீவராசிகள் | பூரண | கிரமம் |
| அலுவல் | களிப்புடன் | சர்வ |
| நிறைவேற்ற | அறவே | வல்லமை |
| மக்கள் | எண்ணிறந்த | பாராட்டி |

பிள்ளைகளே, நமக்குப் பகலில் வெளிச்சம் தருவது எது என்று கேட்டால், உடனே 'சூரியன்' என்று பதில் சொல்வீர்கள் அல்லவா? சூரியன்தான் நமக்கு வெளிச்சம் தருகிறது என்று எப்படித் தெரியும்? சாயங்காலம் சூரியன் மறைந்த உடனே இருள் பரவுகிறது. காலையில் சூரியன் உதித்ததும் இருள் நீங்கி, வெளிச்சம் உண்டாகிறது. அதனால் சூரியனே வெளிச்சத்திற்குக் காரணம் என்பது தெளிவாகிறது.

வெளிச்சம் ஜீவப்பிராணிகளுக்கு ஆனந்தம் அளிக்கிறது. இரவில் இருள் நமக்கு எவ்வளவு பயத்தைத் தருகிறது! இருள் உலகில் பரவினவுடன் 'ஐயோ! இனிமேல் விளையாட முடியாதே' என்று வருத்தப்படுகிற சிறுவரும் உண்டு. வழியில் கிடக்கும் கயிற்றை அல்லது வைக்கோல் புரியைப் பார்த்துப் பாம்பு என்றும், நடப்பட்டிருக்கும் கல்லைப் பார்த்துத் திருடன் என்றும் நினைத்து, இரவில் மயங்கித் திகைக்கின்ற பெரியோர்களும் உண்டு. இவ்விதச் சந்தேக விபரீதம் எல்லாம் காலையில் சூரியன் பிரகாசத்துடன் தோன்றும்போது காணமற் போய்விடும்.

சூரிய வெளிச்சம் இல்லாவிட்டால் உலகத்தில் உள்ள ஜீவராசிகள் நன்கு வாழமுடியாது; பயிர்

பச்சைகள் தழைத்து வளரா. மனிதர்களாகிய நாம் நமது அன்றாட அலுவல்களை நிறைவேற்ற முடியாது. சூரியன் எல்லோருக்கும் மிகவும் அவசியமான ஓர் இயற்கை விளக்கு.



இரவில் வெளிச்சம் பெறுவதற்கு நாம் என்ன செய்கின்றோம்? வீடுகளில் தீபங்களை ஏற்றி வைக்கின்றோம். அவைகள் தற்காலத்தில் பெரும்பாலும் மண்ணெண்ணெயால் எரிகின்றன. பெரிய பட்டணங்களில் மின்சார விளக்குகள் உண்டு. சில ஊர்களில் வீதிகள் தோறும் அநேக விளக்குகள் பிரகாசிக்கின்றன. விளக்கு வெளிச்சத்தின் பொருட்டு உலகமெங்கும் ஏராளமான பணம் செலவிடப்படுகின்றது. இவ்வாறு இரவில் வெளிச்சம் உண்டாக்க மக்கள் செலவிடும் பணம் எத்தனையோ கோடி ரூபாய் ஆகும். ஆயினும், சூரிய வெளிச்சத்திற்கு ஒப்பான வெளிச்சத்தை நாம் உண்டாக்க முடியுமா? அப்படியாயின் சூரிய வெளிச்சம் எத்துணை விலையேறப் பெற்றது என்பதை யோசித்துப் பாருங்கள்.

கடவுள் பகலில் நமக்கு வெளிச்சம் கொடுக்கச் சூரியனாகிய பெரிய விளக்கைத் தந்திருப்பது போல,

இரவில் நமக்கு வெளிச்சம் கொடுப்பதற்குப் பல விண்மீன் விளக்குகளைப் படைத்திருக்கின்றார். வானத்தில் வளர்ந்தும், தேய்ந்தும், உருமாறிப் பிரகாசிக்கிற சந்திரன் அவற்றுள் சிறந்து விளங்கும் ஓர் இராவிளக்காம். பூரண சந்திரன் பிரகாசத்துடன் தோன்றும் இரவில், சிறுவர்கள் தெருவீதிகளில் ஓடி ஆடிக் களிப்பார்கள். பெரியவர்கள் வீட்டின் முன்புறம் நிலவில் இருந்து நெடுநேரம் வார்த்தையாடிக் களிப்புடன் இருப்பார்கள். பௌர்ணமியன்று சந்திரன் இரவு முழுவதும் பிரகாசிக்கும். சந்திரன் அறவே காணப்படாத இரவு அமாவாசை எனப்படும்.



ஆகாயத்தில் இரவில் விட்டு விட்டுப் பிரகாசிக்கும் எண்ணிறந்த நக்ஷத்திரங்கள் யாவும் நமது இராவிளக்குகளே. வெண்முத்துக்கள் போல் காணப்பட்டு, விட்டு விட்டுப் பிரகாசிக்கும் நக்ஷத்திரங்களை 'வெள்ளி' என்றும் அழைப்பர். சந்திர வெளிச்சத்தில் வெள்ளி வெளிச்சம் வெகு துலக்கமாய் நமக்குத் தோன்றாது. முற்றும் இருள் மூடிய இரவில் வெள்ளி வெளிச்சம் துலக்கமாய் இருப்பதை நாம் தெளிவாகக் காணலாம். விண்மீன்களாகிய விளக்குகள் நமக்கு

வெளிச்சம் தருவதும் அல்லாமல், கப்பலோட்டி களுக்கு இரவில் திசையும் காட்டுகின்றன.

இந்த ஆகாய விளக்குகள் யாவும் மிகப் பெரியவை. அவை வெகு தூரத்தில் விண்ணில் இயங்குகின்றபடியால், நமது பார்வைக்கு மிகச் சிறியவைகளாகக் காணப்படுகின்றன. கடவுள் படைத்துள்ள விண் விளக்குகள் மிக்க ஆச்சரியம் வாய்ந்தவை. அவை யாவும் முறை தவருமல் தோன்றித் தம் கடமைகளை நிறைவேற்றுகின்றன. கடவுளுடைய அற்புத சக்தி எப்படிப் பட்டது என்று விளங்குகிறதா? அவருடைய அளவில்லாத சர்வ வல்லமையால் வானமும் பூமியும், அவற்றிலுள்ள யாவும் நிலை-நிற்கின்றன. நமக்கு அவர் செய்துவரும் நன்மைகளை மறவாமல் நன்றி பாராட்டி, அவரைத் துதிப்பது நமது கடமையாகும்.

## கேள்விகள்

1. சூரியனே வெளிச்சத்திற்குக் காரணம் என்பது எவ்விதம் தெளிவாகிறது?

2. சூரிய வெளிச்சம் இல்லாவிட்டால் ஏற்படும் கெடுதல்கள் எவை?

3. இரவில் வெளிச்சம் பெறும் பொருட்டு என்ன செய்கிறோம்?

4. இரவில் நமக்கு வெளிச்சம் தரும் இயற்கை விளக்குகள் யாவை?

5. நக்ஷத்திரங்கள் எவ்விதம் பிரகாசிக்கின்றன? அவை சிறியனவாகத் தோன்றக் காரணம் என்ன?

6. 'விண்விளக்குகள்' என்பன எவை? அவை எவ்விதம் வேலை செய்கின்றன? அவற்றைக் கண்டு நீங்கள் அறிவது என்ன?

## பயிற்சி

1. எதிர்ப்பதம் எழுது:—

வெளிச்சம், துக்கம், இயற்கை, அவசியம், தற்காலம், முன்புறம், தோன்றி, நன்மை.

2. சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுது:—
வழியில், அன்றுடம், வீதிகள் தோறும், தவருமல்.

3. உலகமெங்கும்——பதங்களாகப் பிரித்து எழுது.

4. கீழ்க்கண்ட வாக்கியங்களைப் பூர்த்தி செய்:—

(1) நான்கு துணிகள் வாங்கும் பொருட்டு————

(2) மாலையில் சூரியன் மறைந்தவுடன்————

(3) அவர் பிச்சைக்காரனுக்குச் சோறு கொடுத்ததும் அல்லாமல்——

5. சூரியன் வெளிச்சம் தருகிறது.—இந்த வாக்கியத்தின் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களைக் குறிப்பிடு.

## இலக்கணம்

தீபம்—ஒரு பொருளைக் குறிக்கும் பெயர் ஆகையால் பொருட் பெயர் எனப்படும்.

வீடு—இடத்தைக் குறிக்கும் பெயர். ஆகையால் இடப்பெயர் என்று சொல்லப்படும்.

பகல்—காலத்தைக் குறிக்கும் பெயர். ஆகையால் காலப்பெயர் எனப்படும்.

கண்—ஓர் உறுப்பைக் குறிக்கும் பெயர். ஆகையால் சினைப் பெயர் எனப்படும்.

வெளிச்சம்—ஒருவிதத் தன்மையைக் குறிக்கும் பெயர். ஆகையால் பண்புப்பெயர் எனப்படும்.

மறைதல்—ஒரு தொழிலின் பெயராக இருப்பதால் தொழிற் பெயர் எனப்படும்.

ஆகவே பெயர்ச்சொற்கள், 1. பொருட் பெயர், 2. இடப் பெயர், 3. காலப் பெயர், 4. சினைப்பெயர், 5. பண்புப் பெயர், 6. தொழிற் பெயர் என ஆறு வகைப்படும்.

கீழ்க்கண்ட பெயர்ச்சொற்களுள் ஒவ்வொன்றும் எந்த வகையைச் சேர்ந்தது என்று கூறு:—

சூரியன், சாயங்காலம், இருள், காலை, ஆனந்தம், இரவு, பயம், கயிறு, பாம்பு, வானம், உதித்தல், விளக்கு, பட்டணம், தெரு.

———

## 5. கருதிவாழ்

| | | | |
|---|---|---|---|
| ஒதுங்க | புற்று | அருந்திடும் | வருந்தி |
| தூக்கணம் | குடும்பம் | இசை | மது |
| இரை | சுதந்திரமாய் | கருதி | இணை |

1. கொட்டு மழைக் கொதுங்கவே
   கூடுகட்டித் தூக்கணம்
   சட்டமாக இணையுடன்
   தங்கி நாளும் வாழ்ந்திடும்.

2. வாட்டுமழைக் கெறும்புகள்
   வாரிவந்த இரையினை
   கூட்டிவைத்துப் புற்றிலே
   குடும் பத்துடன் உண்டிடும்

3. திரிந் தலைந்த ஈயெல்லாம்
   தினமுஞ் சேர்த்த மதுவினை
   சொரியும் மழைக் கினத்துடன்
   சுதந்திரமாய் அருந்திடும்.

4. கருப்ப முற்ற இசைக் குயில்
   காகம் செய்த கூண்டிலே
   விரிந்து முட்டை வளரவே
   வருந்தியிட்டுச் சென்றிடும்.

5. கருதி நாளும் வாழ்பவர்
   கவலை யற்று வாழ்வரே
   கருதி வாழச் சோம்புவோர்
   கடு நரகில் வீழ்வரே.

வித்வான் திரு. S. உமைதாணுப் பிள்ளை.

### கேள்விகள்

1. மழைக்கு ஒதுங்க எந்தப்பறவை கூடுகட்டிக்கொள்கிறது?

2. மழைக் காலத்தில் கஷ்டப்படாமலிருக்க எறும்புகளும், தேனீக்களும் என்ன செய்கின்றன ?

3. இந்தப் பாட்டிலிருந்து நீ அறியும் நீதி என்ன ?

### பயிற்சி

1. இணையுடன், அருந்திடும், கடுநரகில், வீழ்வர்—அர்த்தம் எழுது.

2. கொட்டுமழை—இதே அர்த்தமுள்ள வேறு இரண்டு சொற்கள் எழுது.

# 6. நிலக்கரி

| | | |
|---|---|---|
| தாதுப் பொருள் | சுரங்கம் | எளிதாய் |
| நெடுங்காலம் | அபாயம் | சேதம் |
| பூபாரம் | மாண்டு | அத்தியாவசியம் |
| நாளடைவில் | உயிர்ச்சேதம் | மேன்மை |
| மக்கிப்போய் | நூதன | தினுசு |

நிலக்கரி என்பது ஒருவகைத் தாது பொருள். அது மங்கலான கருநிறமும், கொஞ்சம் பளபளப்பும் உடையது. கட்டைக் கரியைவிடக் கெட்டியாயும் பளுவாயும் இருக்கும். நிலக்கரி நெருப்புப் பற்றி எரியும் தன்மையுடையது. நாகரிக தேசத்தார் அதை நெடுங்காலமாய் நெருப்பு எரிக்க உபயோகிக்கிறார்கள்.

பூமியதிர்ச்சி முதலிய காரணங்களால், பல ஆயிர வருஷங்களுக்குமுன் பூமிக்குள் புதையுண்ட காடுகளிலிருந்த மரம், செடி, கொடி முதலியன பூமியின் அடியிலுள்ள உஷ்ணத்தாலும், மேலேயுள்ள பூபாரத்தாலும் நாளடைவில் மக்கிப்போய் நிலக்கரியாக மாறியிருக்கின்றன. நிலக்கரி பூமியின் அடிப்பாகத்திலிருந்து வெட்டி எடுக்கப்படுகிறது. நூறுஅடி முதல் ஆயிரத்து ஐந்நூறு அடி வரை வெட்டி எடுக்கிறார்கள். அது சுரங்கங்களில் அடுக்கடுக்காய்க் காணப்படுகிறது. நம்முடைய சக்கரவர்த்தியார் வசிக்கிற இங்கிலாந்து தேசத்தில் நிலக்கரிச் சுரங்கம் அதிகம். நமது இந்தியா தேசத்தில் நிஜாம் இராஜ்யத்தில் சிங்கரேணி என்னும் இடத்



நிலக்கரி

திலும், வங்காள மாகாணத்தில் இராணிகஞ்சு என்னும் ஊரைச் சுற்றியுள்ள பிரதேசத்திலும் நிலக்கரி வெட்டி எடுக்கப் படுகிறது.




1. நிலக்கரித் தொழிற்சாலை, 2. பாதுகாப்பு விளக்கு, 3. மின்சார தூக்கு இயந்திரம்.

நிலக்கரி சுரங்கவேலை மிகவும் அபாயமானது. ஏனெனில், மிகுந்த ஆழத்தில் ஜனங்கள் வேலைசெய்து கொண்டிருக்கும்பொழுது திடீரெனச் சுரங்கத்தின் மேற்பாகம் இடிந்து விழுந்து உயிர்ச் சேதம் ஏற்

படும். சுரங்கத்தில் நீர்பெருகுவதால் அநேகர் மாண்டு போவதுண்டு. இப்படிப்பட்ட ஆபத்தை நீக்க இயந்திரங்களின் மூலமாய்த் தண்ணீரை இறைத்துவிடுவார்கள். நிலக்கரியில் உண்டாகும் ஒருவித வாயுவில் சில சமயங்களில் நெருப்புப் பற்றிக்கொள்வதனாலும் உயிர்ச்சேதம் ஏற்படும். வேலை செய்வோர் வெளிச்சத்திற்காக வைத்திருக்கும் விளக்கே இப்படிப்பட்ட ஆபத்திக்குக் காரணமாகிவிடுகிறது. விளக்கினால் ஏற்படும் ஆபத்தைத் தடுக்க இப்போது பாதுகாப்பு விளக்கு என்னும் ஒரு நூதன விளக்கை உபயோகித்து வருகிறார்கள்.

முற்காலத்தில் நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்தவர் கஷ்டப்பட்டது போல் இக்காலத்தில் நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்வோர் கஷ்டப்படுவதில்லை. ஏனெனில், மின்சாரத்தின் உதவியால் வேலை எளிதாய் முடிகிறது. கீழே வெட்டப்பட்ட கரியைச் செங்குத்தான சுரங்கமாயின் சுமை தூக்கி இயந்திரங்களாலும், சாய்வான சுரங்கமாயின் சிறிய சுமை வண்டிகளாலும் வெளியேற்றுகின்றனர். இப்போது மின்சார உதவியால் நீர் இறைத்தல், தீபம் போடுதல், நிலக்கரி வெட்டுதல், நிலக்கரியை வெளியேற்றுதல் முதலிய எல்லா வேலைகளையும் செய்து முடிக்கின்றார்கள். இயந்திர உதவிகொண்டு வெட்டுவதால் கரியும் அதிகமாய்ச் சேதப்படுவதில்லை.

நிலக்கரியால் உண்டாகும் உபயோகம் இக்காலத்தில் மிகப் பெரிது. இயந்திர வேலை நடத்துவோர்க்கு இக்கரி அத்தியாவசியமான பொருள்களில் ஒன்றாக இருக்கிறது. ஐரோப்பாக் கண்டத்தில் அடுப்பெரிக்கவும், குளிரைப் போக்கி அறைகளைச் சூடாக வைக்கவும் நிலக்கரியை உபயோகிக்கின்றனர்.

நமக்கு அதிக உபயோகமாகும் இரும்பானது நிலக்கரியின்றிச் சரியாய்ப் பயன்படாது. இரும்பைச் சுத்தி செய்வது நிலக்கரியே அதனை உருக்குவதும் நிலக்கரியே. நமது சக்கரவர்த்தியாருடைய நாடு கைத்தொழிலில் மேன்மையடைந்து சிறப்புடன் இருப்பதற்கு நிலக்கரியும் இரும்புமே காரணம். நிலக்கரியிலிருந்து ஒருவித வாயுவை உற்பத்தி செய்து விளக்கு எரிக்க உபயோகப்படுத்துகிறார்கள். கீல் தைலம் என்ற தாரும், வேறு பல சாயத் தினுசுகளும் நிலக்கரியிலிருந்து உண்டாக்கப்படுகின்றன.

## கேள்விகள்

1. நிலக்கரி என்பது என்ன? அது எப்படி உற்பத்தியாயிற்று?
2. நிலக்கரியின் குணங்கள் என்ன?
3. நிலக்கரி இந்தியாவில் எவ்விடங்களில் கிடைக்கிறது?
4. நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்பவர்களுக்கு நேரிடக்கூடிய ஆபத்துக்கள் எவை?
5. சுரங்கத்தில் வெட்டி எடுக்கப்படும் நிலக்கரியை எவ்விதம் வெளியேற்றுகின்றனர்?
6. நிலக்கரியின் உபயோகங்கள் என்ன?

## பயிற்சி

1. தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுது:—
   நாளடைவில், அடுக்கடுக்காய், திடீரென.
2. நூதன—எதிர்ப்பதம் எழுது.
3. கரி, கறி.—அர்த்த வித்தியாசம் என்ன?

## இலக்கணம்

நிலக்கரியைப் பூமியின் அடிப்பாகத்திலிருந்து வெட்டி யெடுக்கிறார்கள்.—இந்த வாக்கியத்தின் பயனிலை எது?

'எடுக்கிறார்கள்'—பயனிலை. யார் எடுக்கிறார்கள்? என்று கேள்வி கேட்டால் 'மனிதர்கள்' எடுக்கிறார்கள் என்று சொல்லலாம் அல்லவா? மனிதர்கள் என்னும் சொல் வாக்கியத்தில் இல்லாவிட்டாலும் அது மறைந்திருந்து பொருளைக் கொடுக்கும். 'மனிதர்கள்' என்பது எழுவாய் என்று சொல்லப்படும்.

ஐரோப்பாக் கண்டத்தில் அடுப்பெரிக்க நிலக்கரியை உபயோகிக்கிறார்கள்.—இந்த வாக்கியத்திலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களைக் குறிப்பிடு. பெயர்ச் சொற்களையும், அவற்றின் வகைகளையும் கூறு.

# 7. கயிறு திரித்தல்

| | | |
|---|---|---|
| தாம்பு | அரைஞாண் | பிரி |
| தும்பு | பருமன் | சவுரி |
| மூக்குஞாண் | வசம் | சிக்கல் |

நமக்குத் தேவையான ஆயிரக் கணக்கான பொருள்களிலே கயிறும் ஒன்ருகும். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்கக் கயிறு வேண்டும்; மாடு கட்டக் கயிறு வேண்டும்; சாமான்கள் கட்டக் கயிறு வேண்டும்; துணிகளை உலர்த்தவும் கொடிகட்டவும் கயிறு வேண்டும்; பந்தல் போடக் கயிறு வேண்டும்; உறிகட்ட, ஊஞ்சல்கட்ட, தொட்டில்கட்ட, தோரணம் கட்ட கயிறு வேண்டும். இப்படிப் பார்த்துக் கொண்டே போனுல், நமக்குக் கயிறு எவ்வளவு தேவையான பொருள் என்று தெரிந்துகொள்ளலாம்.

கயிறுகளில் பலவகை உண்டு. கயிறுகள் அவைகளைத் திரிக்கக் கையாளப்படும் பொருள்களுக்குத் தக்கபடி நூல்கயிறு, சணல் கயிறு, கற்ருழை நார்க்கயிறு, தென்னஞ் சவுரிக்கயிறு, பனை நார்க் கயிறு என்று பலவகைப் படும். தேர் இழுக்க உபயோகிக்கும் கயிற்றுக்குத் தேர்வடம் என்பது பெயர். தண்ணீர் இறைக்கும் கயிற்றுக்குத் தாம்புக் கயிறு என்பது பெயர். மாடுகட்டும் கயிற்றுக்குத் தும்பு என்பது பெயர். மாட்டின் மூக்கில் இடும் கயிற்றுக்கு மூக்குஞாண் என்பது பெயர். நாம் நமது இடுப்பில் கட்டும் கயிற்றுக்கு அரைஞாண் என்பது பெயர். இப்படியே கயிறுகள் அவை உபயோகப்படும் தன்மையாலும், அவற்



வடக்கயிறு

றின் பருமனுலும் நீளத்தாலும் வெவ்வேறு பெயர்கள் பெறும்.

கயிறுகள் நமக்குப் பலவகைகளில் பயன் படுவதிஞலே நமது நாட்டில் கயிறு திரித்தலை ஒரு கைத்தொழிலாக நடத்தி வருகிரேம். இது குடிசைத் தொழில்களில் ஒன்ருகும். இந்தத் தொழிலை எங்கும் யாவரும் வெகு சுலபமாகச் செய்யலாம். இந்தத் தொழிலுக்கு அதிகமான பணம் தேவையில்லை; நெடுநாள் பழக வேண்டியதும் இல்லை.

மற்றெல்லாக் கயிறுகளையும் விட நூல் கயிறு திரிப்பது மிகவும் எளிது. நூலில் இரண்டு அல்லது மூன்று இழைகளை எடுத்துக்கொள். அவற்றைச் சேர்த்து உன் கைக்கு எந்தப் பக்கம் வசமோ அந்தப் பக்கமாக அவற்றைத் திரித்து முறுக்கு. இப்படித் திரிக்கப்படும் கயிற்றுக்குப் பிரி என்பது பெயர். ஒரு கயிற்றில் இரண்டு முதல் அநேக பிரிகள் இருக்கும். இரண்டாவது பிரியையும் மூன்ருவது பிரியையும் முன் திரித்ததற்கு எதிர்ப்பக்கமாகத் திரிக்கவேண்டும். இப்படித் தனித்தனியே திரித்த பிரிகளை ஒன்ருய்ச் சேர்த்து முறுக்க வேண்டும். அப்பொழுது முப்பிரிக் கயிருகும். பின்பு முறுக்குகள் நன்ருய்ப் படியுமட்டும் கயிற்றைச் சுற்றிவைக்க வேண்டும்.

கயிறுகளில் வெகுவாகப் பயன் பயன்படுவது தென்னஞ் சவுரிக்கயிறு. இதைக் கொச்சக்கயிறு என்றும் சொல்லுவதுண்டு. தேங்காயின்மேல் இருக்கும் மட்டையிலிருந்து கிடைக்கும் சவுரியினுல் இதைச் செய்ய வேண்டும். தேங்காய் மட்டைகளைத் தண்ணீரில் ஊறப்போட வேண்டும். அந்த மட்டைகளிலுள்ள சோறு அழுகுமட்டும் மட்டைகள் ஊற

வேண்டும். நன்ருய் ஊறினபின் அதை ஒரு கல்லின்மேல் வைத்து, ஒரு கட்டையால் அடிக்க வேண்டும். அடிக்கும் பொழுது மட்டையில் உள்ள சோறு விலகிவிடும். அப்பொழுது சுத்தமான நார் கிடைக்கும். பின்பு நாரைச் சுத்தமான தண்ணீரில் நன்ருகத் தேய்த்துக் கழுவ வேண்டும். இந்த நாரைச்



சிக்கல் எடுத்துக் குஞ்சம் குஞ்சமாகக் கட்டிவைத்துக்கொண்டு, ஒரே பருமனுன பிரிகளாக முறுக்கவேண்டும். இந்தப் பிரிகளை இருபுறமும் கவருள்ள பலகைகளில் சுற்றி வைத்துக்கொள்ள வேண்டும். கயிறு எவ்வளவு பருமஞக இருக்க வேண்டுமோ அதற்கு ஏற்றபடி பிரிகளும் மருமஞக இருக்கவேண்டும். மூன்று முதல் ஐந்து பிரிகள் மட்டும் ஒன்ருய்ச் சேர்த்துக் கயிற்றைத் தேவையான அளவிற்குப் பருமனுக்கலாம்.

இப்படியே பனை நார்க் கயிறும் மற்றும் பல கயிறுகளும் செய்யப்படுகின்றன. கொச்சக் கயிறுகளால் பாய் முதலியவை நெசவுசெய்கிருர்கள். அந்தப் பாய்களை வீடுகளில் மிதிபாயாக உபயோகிக்கிருர்கள்.

## கேள்விகள்

1. எந்தப் பொருள்களினுல் கயிறுகள் திரிக்கலாம்?
2. எத்தனை விதமான கயிறுகள் உண்டு?
3. எதற்கெல்லாம் கயிறுகள் தேவையாக இருக்கின்றன?
4. கொச்சக் கயிறுகளைத் திரிக்க என்ன செய்ய வேண்டும்?

## பயிற்சி

1. உரி—உறி, இலை—இழை—ஜதை ஜதையாகக் கொடுக்கப்பட்டுள்ள சொற்கள் எவ்விதம் அர்த்தத்தில் வித்தியாசப் படுகின்றன?

2. திரி—இதைப் பெயர்ச் சொல்லாகவும், வினைச் சொல்லாகவும் உபயோகித்துத் தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

3. தேவை இல்லை; வேண்டியதும் இல்லை—சந்தி சேர்த்து எழுது.

## இலக்கணம்

'கயிறு'—ஒரு பொருளைக் குறிக்கும் பெயர். இவ்விதம் ஒரு பொருளைக் குறிப்பது ஒருமை எனப்படும்.

'கயிறுகள்' ஒன்றுக்கு மேற்பட்டவைகளைக் குறிப்பதால் பன்மை எனப்படும்.

ஒருமை, பன்மை என்பவைகளை எண் என்று கூறுவர்.

கீழ்க்கண்டவற்றுள் ஒருமைச் சொற்கள் எவை? பன்மைச் சொற்கள் எவை?

பாய்கள், தொட்டில், தேங்காய்கள், குருவி, மரங்கள், கூடு, பிராணிகள், படுக்கை, கொசுக்கள், புழுக்கள், காடு.

## 8. இயேசு நாதர்

| | | |
|---|---|---|
| கோத்திரம் | தரிசித்து | அறவுரை |
| கன்னிகை | காணிக்கை | மரித்தவர் |
| குடிக் கணக்கு | சோதிடம் | போற்றி |
| கட்டளே | சாஸ்திரி | தேசாதிபதி |
| விடுதிகள் | ஞானம் | பகைவர் |
| அற்புதமாய் | சர்வேசுவரன் | பரிகாசம் |
| பொருள் | அருள் | வல்லமை |
| இரட்சி | நற்போதனே | சீடர்கள் |

சுமார் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பு பாலஸ்தீனு நாட்டில் நாசரேத் என்ற சிற்றூரில் சூசையப்பர் என்ற பெயருள்ள ஒரு யூதர் வசித்து வந்தார். அவர் தாவீது இராஜாவின் கோத்திரத்தில் பிறந்தவர். சூசையப்பர் நாசரேத்தில் தச்சத் தொழில் செய்து வந்தார். அவர் மரியம்மாள் என்ற கன்னிகையை மணஞ் செய்திருந்தார். அவர்கள் ஏழையாயினும், தேவ பக்தியில் சிறந்து புண்ணியம் நிறைந்தவர்களா யிருந்தார்கள்.

அக்காலத்தில் பாலஸ்தீனு நாட்டை ஆண்ட செசார் அகுஸ்துஸ் சக்கரவர்த்தி உலக முழுமையும் குடிக்கணக்கு எடுக்கும்படியாகக் கட்டளேயிட்டார். ஆதலால், எல்லோரும் தங்கள் பெயரை எழுதிக் கொடுக்கும்பொருட்டுத் தங்கள் தங்கள் சொந்த ஊருக்குச் சென்றுர்கள்.

சூசையப்பர் இராஜ கட்டளேக்கு இணங்கி அமைந்து கருப்பவதியான தம்முடைய மனேவி மரியம்மாளோடு பெயர் எழுதிக் கொடுக்கும் பொருட்டுத் தம் சொந்த ஊராகிய பெத்லேகம் என்ற நகருக்குப் போனுர். அவர்கள் அவ்வூருக்குப் போய்ச் சேரு

முன் இருட்டிப்போயிற்று. அன்று பிறதேசவாசிகள் பலர் அவ்வூரில் வந்து கூடியிருந்தனர். ஆதலால், தங்குவதற்குச் சத்திரம் முதலிய விடுதிகள் அகப்படாமல், அவர்கள் ஒரு மாட்டுத் தொழுவத்



தில் தங்கி இரவைப் போக்கவேண்டியதாயிற்று. அவர்கள் அங்கே இருக்கும்பொழுது, மரியம்மாள் அற்புதமான ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். குழந்தை பிறந்த எட்டாம் நாள் அதற்கு இயேசு என்று பெயரிட்டார்கள். 'இயேசு' என்னும் பதம் 'இரட்சிக்கிறவர்' என்று பொருள்படும்.

இயேசுநாதர் பிறந்தவுடன் ஆகாயத்தில் பிரகாசமுள்ள ஓர் அதிசய நட்சத்திரம் தோன்றியது. அதைக் கண்டதும், ஆசியாவிலிருந்த மூன்று அரசர்

கள் புறப்பட்டு வந்து, குழந்தை இயேசுவைத் தரிசித்து, அவருக்குப் பொன், தூபம், மீறை என்ற காணிக்கை இவைகளை ஒப்புக்கொடுத்துத் திரும்பினர். சோதிடசாஸ்திரிகள் பிறந்திருக்கும் இயேசுவானவர் யூதர்களுக்கு அரசர் ஆவார் என்று கூறினார்கள். அதனால் எரோது என்ற யூத அரசர் இயேசுவைக் கொல்லப் பல வழிகளில் முயற்சி செய்தார். அவரது முயற்சி பலிக்கவில்லை. சூசையப்பர், மரியம்மாளையும் குழந்தை இயேசுவையும் அழைத்துக் கொண்டு நாசரேத்துக்குத் திரும்பி வந்தார்.

இயேசுநாதர் வளர்ந்து, ஞானத்தால் நிறைந்து விளங்கினார். சர்வேசுவரனுடைய அருளும் அவரிடத்தில் இருந்தது. இவ்வாறு இயேசுநாதர் ஞானத்திலும், வயதிலும் வளர்ந்து முப்பதாம் பிராயத்தை அடைந்தார்.

இயேசுநாதர், தமது முப்பதாம் பிராயமுதல் ஊர் ஊராய்ச் சென்று ஜனங்களுக்கு நற்போதனைகளைப் போதிக்க ஆரம்பித்தார்; கடவுளை முழு மனத்தோடு சிநேகிக்கவேண்டும். தன்னைப்போல் பிறரையும் நேசிக்கவேண்டும்' என்று போதித்தார். இவ்விதம் இயேசுநாதர் ஊர்கள்தோறும் பட்டணங்கள்தோறும் சென்று, பல அறவுரைகளைப் போதித்துக்கொண்டு வந்தார்.

அக்காலத்தில் அவர் செய்த அற்புதங்கள் எண்ணிறந்தன. நோயாளிகளைக் குணப்படுத்தினார்; குருடருக்குப் பார்வை அளித்தார்; செவிடருக்குச் செவி உணர்வைக் கொடுத்தார்; ஊமைகளைப் பேசச் செய்தார். இவ்விதமாக அவர் தாம் தேவ குமாரன் என்பதை அவர்களுக்கு அறியப்படுத்தினார். ஆகை

யால், ஆயிரக்கணக்கான ஜனங்கள் அவரைப் பின் பற்றிச் சென்று போற்றி வந்தார்கள்.

இயேசுநாதர் இவ்வாறு அற்புதங்கள் செய்து வருகையில், அந்நாட்டிலுள்ள சிலர் அவர்மீது பொறாமை கொண்டார்கள். ஆகையால், அவர்கள் அவரைப் பகைத்துக் கடைசியாக அவரைக் கொன்றுவிடவும் தீர்மானித்தார்கள். ஆகவே, அவ ரைத் தந்திரமாய்ப் பிடித்துத்தேச அதிகாரியின்முன் நிறுத்தி, அவர்மீது அநேக பொய்க் குற்றங்களைச் சாற்றி, அவரைக் கொல்லவேண்டுமென்று கூறினர் கள். ஆகவே, தேசாதிபதி இயேசுநாதரைச் சிலுவை யில் அறைந்து கொல்லக் கட்டளையிட்டார்.

அவரது பகைவர்கள் அவர் தோளின்மேல் ஒரு பாரச் சிலுவையைச் சுமத்தி கொலைக் களமான கல்வாரி மலைக்கு அழைத்துக்கொண்டு சென்றார்கள்; அங்கே அவரை அந்தச் சிலுவையில் அறைந்தார் கள். இயேசுநாதர் சிலுவையில் அறையப்பட் டிருந்தபொழுது அவரது பகைவர்கள் அவரைப் பார்த்து நகைத்துப் பரிகாசம் பண்ணினர்கள். அந் தச் சமயத்தில் இயேசுநாதர் அவர்கள்மீது மன மிரங்கி, "பிதாவே, இவர்கள் அறியாமல் இக்காரியங் களைச் செய்கிறார்கள். இவர்களுக்குப் பொறுத்தல் தந்தருளும்" என்று வேண்டிக்கொண்டார்.

இயேசுநாதர் மரித்ததும் அவரை ஒரு புதுக் கல்லறையில் அடக்கம் செய்தார்கள். மூன்றும் நாள் அவர் தம் சொந்த வல்லமையால் உயிர்த்து எழுந்தார். உயிர்த்தபின் இவ்வுலகில் அவர் நாற்பது நாட்கள் தங்கியிருந்து, தமது போதனையை உலகம் எங்கும் பரப்பும்படி தமது சீடர்களுக்குக் கட்டளை யிட்டுப் பரலோகத்துக்கு எழுந்தருளிப் போனர்.

இயேசுநாதரின் கட்டளைப்படி அவரது சீடர்கள் உலகம் எங்கும் சென்று, அவரது போதனையைப் போதித்தார்கள். ஆகவே, இன்று உலக முழுவதிலும் கிறிஸ்து மதம் பரவியிருக்கிறது.

### கேள்விகள்

1. இயேசு என்னும் பதத்தின் பொருள் என்ன?
2. இயேசுநாதர் பிறந்ததைக் கேள்விப்பட்ட எரோது என்ன முயற்சி செய்தான்? ஏன்?
3. இயேசுநாதர் செய்த சில அற்புதங்களைக் கூறு.
4. அவர் மக்களுக்கு உபதேசித்தது என்ன?
5. இயேசுநாதர் சிலுவையில் அறையப்பட்டது ஏன்?

### பயிற்சி

1. மணம் - வெவ்வேறான இரண்டு அர்த்தம் எழுது.
2. ஏழை, புண்ணியம், நற்போதனை, பகைவர்—எதிர்ப்பதங்கள் எழுது.
3. பிறதேசம், பிரதேசம்; பதம், பாதம்; தோல், தோள்; இரங்கி, இறங்கி - ஜதை ஜதையாகக் கொடுக்கப்பட்ட வார்த்தைகள் எவ்விதம் அர்த்தத்தில் மாறுபடுகின்றன?
4. மனமிரங்கி - பிரித்து எழுது.

### இலக்கணம்

அரசர், தந்தை, சீடர்கள் இவை மக்களைக் குறிப்பதால் உயர்திணைப் பெயர்கள் எனப்படும்.

மக்களைத் தவிர, மற்றைய ஊர்வன, பறப்பன, நடப்பன முதலிய பகுத்தறிவு இல்லாத உயிர் உள்ள பொருள்களின் பெயர்களையும், கல் புத்தகம் முதலிய உயிர் இல்லாத பொருள்களையும் குறிக்கும் சொற்கள் அஃறிணைப் பெயர்கள் என்று சொல்லப்படும்.

கீழ்க்கண்ட பெயர்ச் சொற்களில், உயர்திணைப் பெயர்கள் எவை? அஃறிணைப்பெயர்கள் எவை?

சிலுவை, குசையப்பர், தோட்டம், சுந்தரி, கூலிக்காரன், கிளி, இலைகள், வேப்பமரம், கவர்னர், இந்தியா, அரிசி, அரசி.

# 9. ஆராய்ச்சியின் பயன்

| | | |
|---|---|---|
| ஆங்கிலம் | அமர்ந்தான் | சித்திபெருமல் |
| இத்தகைய | ஏராளமான | பரீக்ஷிக்க |
| சக்தி | பளுவான | பிரவேசிக்க |
| புலன் | பாரம் | புகுந்து |
| இளைஞன் | வன்மை | இணைத்து |
| அசைவு | ஆலை | சுழல |
| சிந்தனை | பலவாறு | சுழற்சி |
| யோசனை | ஆராய்ந்து | அளவற்ற |

ரெயில் வண்டித் தொடர் இரும்புத் தண்டவாளங்களின்மீது வேகமாய் ஓடுகிறது அல்லவா? இரும்புத் தண்டவாளத்திற்கு ஆங்கிலத்தில் 'ரெயில்' என்று பெயர். ரெயில் வண்டி இரும்புத் தண்டவாளத்தின்மீது செல்வதால் அதற்கு அப்பெயர் ஏற்பட்டது. ரெயில் வண்டியை இழுத்துச் செல்



வது யாது? மாடாவது மனிதனாவது அதனை இழுத்துக்கொண்டு ஓடக்கூடுமா? இத்தகைய பெரிய வண்டித் தொடரை இழுக்கவேண்டுமானால், அதிக சக்தி வேண்டும். அப்படியானால் எதனுடைய சக்தியினால் அது ஓடுகிறது? ரெயில் வண்டி நீராவியின் சக்தியினால் ஓடுகிறது.

பிள்ளைகளே! ரெயில் வண்டிகள் இவ்வாறு ஓடுவதற்கு ஒரு சிறுவனே காரணமாய் இருந்தான் என்றால், அதைக் கேட்க உங்களுக்கு அதிக ஆச்சரியமும் சந்தோஷமும் உண்டாகுமன்றோ? உண்மைதான். ஒரு சிறுவனுடைய ஆராய்ச்சியின் பலனால்தான் பெரிய ரெயில் வண்டிகள் உலகம் எங்கும் ஓடுகின்றன.

அந்தச் சிறுவன் யார்? அவன் இங்கிலாந்து தேசத்தில் வசித்து வந்த ஜேம்ஸ் வாட் என்ற ஓர் இளைஞன். அவன் ஒரு நாள் பள்ளிக்கூடத்திற்குப் போகாமல் வீட்டில் இருந்தான். அவனுடைய தாயார் ஓர் இரும்புக் கெட்டிலில் சிறிது தண்ணீரை ஊற்றி ஒரு தட்டினால் மூடி அதனை அடுப்பில் ஏற்றியிருந்தாள். சிறிது நேரத்திற்குள் நீர் சூடேறிக் கொதிக்க ஆரம்பித்தது. நீராவி மேலே வந்துகொண்டிருந்தது. மேல் எழும்பிய நீராவியானது கெண்டியின் மேல்மூடியைத் தூக்கி அசைவுண்டாக்கிற்று. ஜேம்ஸ் வாட் தன் சிந்தனையை எல்லாம் அதிற் செலுத்தி, ஆழ்ந்த யோசனையில் அமர்ந்தான்:

'ஆஹா! நீராவி தன் சக்தியினால்தான் மேல் மூடியைத் தூக்குகிறது. இச்சிறு கெண்டியினின்று எழும்பிய நீராவி இச்சிறு மூடியை அசைக்கிறது. அப்படியாயின், ஏராளமான நீராவி உண்டாகுமானால் அது பளுவான பாரத்தையும் அசைத்துத் தள்ளுமல்லவா? இந்த நீராவியின் சக்தியை எவ்வாறு உபயோகப்படுத்தலாம்? மாடு மனிதர் இல்லாமலே நீராவியின் வன்மையினால் ஆலைகளை ஓட்டலாமல்லவா? வண்டிகளை ஓட்டலாமல்லவா?' என்று பலவாறு ஜேம்ஸ் வாட் எண்ணினான்.

புத்தியோடு ஆராய்ந்து செய்யும் விஷயம் சித்தி பெருமல் போகுமா? அன்று முதல் நீராவியின் சக்தியைப் பரீக்ஷிக்க ஒரு நீண்ட குழாயில் அதை அடைத்து, அதனுள் பிரவேசிக்கத் தக்க உலக்கை யொன்றைப் புகுத்தி, நீராவி குப் குப் என்று வெளி யேறவும், அதனுல் உலக்கையானது வெளியே தள் ளுண்டு ஆடவும் செய்தான். பிறகு அதனை ஓர் இயந்திரத்தோடு இணைத்து, அந்த இயந்திரத்தின் சக்கரம் சுழலவும், அச்சுழற்சியால் இயந்திரம் பூரா வும் சுழலவும் செய்தான். இங்ஙனம் அவன் பல வாறு முயன்றதன் பயனுக நீராவியின் சக்தியினுல் நீர் இறைக்கும் இயந்திரமொன்று சரியாய் வேலை செய்யும்படி கண்டுபிடிக்கப்பட்டது.

நீராவியின் அளவற்ற சக்தியைக் கண்டுபிடித்த வனும், அதனை முதன் முதலாக மேலான முறையில் உலகத்தாருக்குப் பிரயோஜனமாகப் பயன்படுத்தின வனும் ஜேம்ஸ் வாட் என்னும் சிறுவனே. அவன் தொட்டுக் காட்டிய இந்தப் பெரிய வித்தை உலகில் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. அதன் பலனுகப் பெரிய இயந்திரங்கள் இன்று நீராவியினுல் வேலை செய்கின்றன. கடலில் கப்பல்களும், தரையில் ரெயில் வண்டிகளும் நீராவி இயந்திரச் சக்தியினுல் ஓடுகின்றன.

### கேள்விகள்

1. ரெயில் வண்டிக்கு அப்பெயர் ஏற்படக் காரணம் என்ன?

2. ரெயில் வண்டி எதன் சக்தியால் ஓட்டப்படுகிறது?

3. நீராவின் சக்தியை முதன் முதல் கண்டுபிடித்தவர் யார்? எவ்விதம்?

4. நீராவியின் சக்தியை உபயோகித்து ஜேம்ஸ் வாட் கண்டு பிடித்த இயந்திரம் யாது

## பயிற்சி

1. இடது பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் சொல்லை வலது பக்கத்திலுள்ள சொற்றொடரில் பொருத்தமான இடத்தில் அமைத்துப் படி.

i. வீட்டில்—ஜேம்ஸ்வாட் ஒரு நாள் இருந்தான்.

ii. சக்தியால்—நீராவியின் ரெயில்வண்டி ஓட்டப்படுகிறது.

iii. மீது—ரெயில் வண்டி தண்டவாளங்கள் வேகமாக ஓடுகிறது.

2. வாக்கியங்களில் அமைத்து எழுது :—

அன்று முதல், முதல் முதல், அசைவு, ஏராளமான.

3. ரெயில், தண்டவாளங்கள், ஜேம்ஸ்வாட், உலக்கை, குதிரைகள்—இப் பெயர்ச் சொற்களின் வகை, எண், திணை இவைகளைக் கூறு.

## இலக்கணம்

ஒரு வாக்கியத்தில் எழுவாய் என்ன எண், திணையில் வருகின்றதோ அதே எண், திணையில் பயனிலையும் இருக்க வேண்டும்.

கீழ்க்கண்ட வாக்கியங்களைத் திருத்து :—

மேஜையின் மீது புத்தகம் இருக்கின்றன.
மேஜையின் மீது புத்தகங்கள் இருக்கிறது.
பையன் தெருவின் வழியாக ஓடுகிறார்கள்.
பையன்கள் தெருவின் வழியாக ஓடுகின்றன.
நாய்கள் வேகமாக ஓடுகிறான்.
நாய்கள் வேகமாக ஓடுகிறது.

## 10. ஆறு

| | | |
|---|---|---|
| கடந்து | கண்ணறை | பக்கமாய் |
| எல்லை | திட்டு | மாங்கனி |
| தவழ்ந்து | அழல் | மலர்கள் |
| அணை | பொழில் | ஆதி |
| சாடி | நேயமுற | இறைவன் |

1. கல்லும் மலையும் குதித்து வந்தேன்—பெருங்
காடும் செடியும் கடந்து வந்தேன்
எல்லை விரிந்த சமவெளி—எங்குநான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன்.

2. கட்டும் அணையேறிச் சாடிவந்தேன்—அதன்
கண்ணறை தோறும் நுழைத்துவந்தேன்
திட்டுத் திடர்களும் சுற்றிவந்தேன்—மடைச்
சீப்புகள் மோதித் திறந்து வந்தேன்.

3. காயும் நிலத்தழல் ஆற்றிவந்தேன்—அதில்
கண்குளிரப் பயிர்கள் கண்டு வந்தேன்
ஆயும்மலர்ப் பொழில் செய்துவந்தேன்-அங்கே
ஆசை தீரவிளை யாடிவந்தேன்.

4. ஏருத மேடுகள் ஏறிவந்தேன்—பல
ஏரிகுளங்கள் நிரப்பி வந்தேன்
ஊருத ஊற்றிலும் உட்புகுந்தேன்—மணல்
ஓடை பொங்கிட ஓடிவந்தேன்.

5. ஆயிரம் காலால் நடந்து வந்தேன்—நன்செய்
அத்தனையும் சுற்றிப் பார்த்து வந்தேன்
நேயமுறப் புன் செய்க் காட்டிலும்—அங்கங்கு
நீரை இறைத்து நெடுகவந்தேன்.

6. பஞ்சை யரைத்து நூல் நூற்று வந்தேன்—சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்துவந்தேன்
நெஞ்சம் உலர்ந்த நெடுநகரிற்—குழாய்
நீராகவும் சென்று பாய்ந்து வந்தேன்.

7. மாங்கனி தேங்கனி வாரிவந்தேன்—நல்ல
வாசமலர்களும் அள்ளி வந்தேன்
தீங்கரும் பாயிரம் தள்ளிவந்தேன்—மிகத்
தேனும் தினையுமே சேர்த்து வந்தேன்.

8. அல்லும் பகலும் அலைந்து வந்தேன்—எங்கள்
ஆதி இறைவனைக் காணவந்தேன்
நில்லும் எனக்கினி நேரமில்லை—இன்னும்
நீண்ட வழிபோக வேண்டும் அம்மா.

திரு. சி. தேசிக விநாயகம் பிள்ளை.

### கேள்விகள்

1. நதி தான் எந்தெந்த இடங்களின் வழியாகப் பாய்ந்து வந்ததாகச் சொல்லுகிறது?

2. நதி எங்கே குழாய் நீராகப் பாய்ந்து வந்தது?

3. வழியில் என்னென்ன இயந்திரச் சாலைகளில் வேலை செய்து வந்ததாகக் கூறுகிறது?

### பயிற்சி

1. ஏரி-ஏறி, இரங்கி-இறங்கி—அர்த்தத்தில் என்ன வித்தியாசம்?

2. உலர்ந்த, மேடு, நல்ல—எதிர்ப்பதம் எழுது.

### இலக்கணம்

இப்பாட்டிலிருந்து நான்கு ஒருமைப் பெயர்களையும், நான்கு பன்மைப் பெயர்களையும் எடுத்தெழுது.

---

## 11. நீர்த்துளியின் கதை

| | | |
|---|---|---|
| சவாரி | ஒளி | அசைந்தாடல் |
| செங்கதிர் | வெப்பம் | சந்தோஷம் |
| ரூபம் | மயக்கம் | திடீர் |
| வடிவம் | வெண்மேகம் | கார்மேகம் |

நான் ஒரு நீர்த்துளி. நான் முதலில் வாழ்ந்த இடம் இந்து மகா சமுத்திரம். அங்கு என்னைப் போன்ற நீர்த்துளிகள் பல கூடி வாழ்கின்றன. அந்தக் கடலில் எத்தனை நீர்த்துளிகள் இருக்கின்றன என்று எவருமே கணக்கிட்டுச் சொல்ல முடியாது. ஆகையால், நான் மிகப் பெரிய குடும்பத்தில் பிறந்தவன்.

நானும் கடலில் உள்ள மற்ற நீர்த்துளிகளும் சேர்ந்து பலவிதமான விளையாட்டுக்கள் விளையாடுவோம். நாங்கள் அலைகளின் மேல் சவாரிசெய்வோம். கடலில் ஓடும் கப்பல்களைத் தாக்கித் திரும்பவும் நீர்த்துளிகளாகத் துள்ளிக் கடலில் விழுவோம்; பாறைகளில் மோதித் துள்ளிக் குதித்து விளையாடுவோம்.

இப்படி நான் கடலில் மற்ற நீர்த்துளிகளோடு சந்தோஷமாக வாழ்ந்து வரும் போது, ஒருநாள் காலையில் சூரியன் வெகு அழகாகத் தன் செங்கதிர்களை வீசிக்கொண்டு, கிழக்குத் திசையில் தோன்றினான். நான் கடலின் அடியில் இருந்து அவனுடைய அழகைப் பார்க்க மேலே எழுந்து வந்தேன்.

இப்படிச் சூரியனுடைய அழகான ஒளியைப் பார்த்து மகிழ்ந்து விளையாடிக்கொண்டிருந்த போது, எனக்கு வெயிலின் வெப்பம் தாங்க முடியாமல் தலை

மயக்கம் உண்டாயிற்று. உடனே நான் கடலை விட்டு வானத்தை நோக்கிக் கிளம்புவதாகத் தோன்றியது. என்னைப் போலவே கோடிக்கணக்கான நீர்த் துளிகள் வானத்தை நோக்கிக் கிளம்பிக் கொண்டிருந்தன. அப்பொழுது நாங்கள் எல்லோரும் நீர்த் துளியின் வடிவம் மாறி, ஆவி உருவம் அடைந்தோம். நாங்கள் ஆவி உருவத்தில் இருந்ததினால், எங்களை எவருமே பார்க்கமுடியவில்லை. எனக்கு நீர்த்துளி வடிவம் மாறிப் போய் விட்டதே என்று மிகவும் துக்கமாக இருந்தது.

அப்பொழுது ஒரு காற்று அடித்தது. உடனே நான் வானத்தின் உயரக் கண்ணுக்கு எட்டாத ஓர் இடத்தில் என்னைப்போல் ஆவி உருவத்திலிருந்த என் நண்பர்களோடு சேர்ந்து கொண்டேன். நீராவி உருவிலே இருந்த நாங்கள் கைகோத்து விளையாடின படியே வானத்தில் உலாவிக் கொண்டிருந்தோம். அப்பொழுது நாங்கள் வெண்மைநிறமாக இருந்தோம். நாங்கள் அங்கிருந்து கீழே பூமியை எட்டிப் பார்த்தோம். அங்கே ஒரு பையன் எங்களைத் தன் தங்கைக்குச் சுட்டிக்காட்டி, "அதோ! அந்த மேகத்தைப்பார்! மிகவும் அழகான அந்த வெண்மேகம் எப்படி அசைந்தாடிக்கொண்டு ஆகாயத்திலே போகிறது பார்!" என்று சொன்னான். அவன் எங்களை நோக்கி அழகான வெண் மேகம் என்று கூறியதைக்கேட்டு, நான் மிகவும் சந்தோஷமடைந்தேன்.

திடீர் என்று எங்கள்மீது குளிர்ந்த காற்றுப் பட்டது. உடனே எங்கள் உடல்கள் கறுத்து விட்டன. கீழே பூமியில் உள்ள மனிதர்கள் எங்களைச் சுட்டிக் காட்டி, "அதோ! அந்தக் கார்மேகம் எங்

குமே போகாமல் இங்கேயே மழை பெய்தால் நமது பயிர் நிலங்கள் நன்ருக விளையுமே" என்ருர்கள்.

அதே சமயத்தில் திரும்பவும் காற்றடித்தது. எங்கள் பக்கத்திலே மற்ருெரு கருமேகம் வந்தது. அது எங்களை முட்டிற்று. நாங்களும் அதை முட்டினேம். இப்படி முட்டி மோதினபோது மின்னல் மின்னிற்று; இடி இடித்தது. எங்களை முட்டி மோதின மேகமோ நீர்த்துளியாக மாறிக் கடலிலேயே மழையாகப் பெய்து மறைந்தது.

நாங்களோ வேகமாக அடித்த காற்றிலே அகப்பட்டு மலை உச்சிக்குப் போய்விட்டோம். அங்கே போனதும் நாங்கள் மழையாக விழுந்துவிட்டோம். கடலிலே உப்பு நீர்த்துளியாக இருந்த நான், மலையிலே சுத்தமான நீர்த்துளியாக விழுந்தேன்.

நான் அந்த மலையில் ஒரு சிறு விதையின் மேல்விழுந்தேன். அந்த விதை என்னைக் குடித்துவிட்டது. அதன்மீது சூரியன் பிரகாசித்தது. காற்று வந்து அந்த விதையின் காதிலே "சிறு விதையே! கண்ணைத் திற" என்றது. சூரியனுடைய செங்கதிர் வந்து அந்த விதையை முத்தம் இட்டு, "கண்ணே, விதைப் பாப்பா, கண்ணைத்திற!" என்றது. உடனே அந்த விதை முளைத்துச் செடியாக வளர்ந்தது. அந்தச் செடியில் அழகான ஒரு மலர் பூத்தது. அந்தப் பூவின் நடுவில் ஒரு துளித் தேன் இருந்தது. அந்தத் தேன் துளி யார் என்று நினைக்கிறீர்கள்? கடலிலே நீர்த்துளியாக இருந்த நானே இப்பொழுது தேனுக மாறி விட்டேன். இதை நினைத்து நினைத்து நான் சந்தோஷப் பட்டுக்கொண்டிருக்கும் போது, ஒரு தேனீ பாடிக்கொண்டே நான் இருந்த மலரில் வந்து என்னை எடுத்துக்கொண்டு போய்விட்டது.

### கேள்விகள்

1. நீர்த்துளி கடலிலிருந்து எப்படி வானத்திற்குப் போயிற்று?

2. நீர்த்துளிகள் வானத்திற்குப் போகும் பொழுது அவற்றிற்கு என்ன பெயர்?

3. எப்பொழுது மின்னல் உண்டாகும்?

4. நீர்த்துளி எங்கே மழையாக விழுந்தது?

5. விதைகள் முளைக்க என்ன வேண்டும்?

6. வெண்மையான மேகங்கள் மழைமேகமாகும் பொழுது என்ன நிறம் பெறும்?

### பயிற்சி

1. ஒளி, ஒழி—அர்த்த வித்தியாசம் விளங்கும்படி தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

2. கீழ்க்கண்ட சொற்றொடர்களில் கோடிட்ட இடங்களைச் சரியான எழுத்துகளால் நிரப்பு :—

அந்த—கடல், நீர்—துளி, மேகத்தை—பார், தங்கைக்கு—சுட்டி—காட்டி.

3. பையன் மேகத்தைப் பார்த்தான்.—இந்த வாக்கியத்திலுள்ள பெயர்ச் சொற்களுக்கு எண், திணை கூறு.

### இலக்கணம்

பையன்—இது உயர்திணை, ஒருமைப் பெயர். இது ஆணைக் குறிப்பதால் ஆண்பால் பெயர் எனப்படும்.

சரோஜினி—இது உயர்திணை ஒருமைப் பெயர். இது ஒரு பெண்ணைக் குறிப்பதால் பெண்பால் பெயர் ஆகும்.

மனிதர்கள்—இது ஆண்களில் பலரைக் குறிக்கிறது. ஸ்திரீகள்—பெண்களில் பலரைக் குறிக்கிறது. ஜனங்கள்—இது ஆண் பெண் கலந்த பலரைக் குறிக்கிறது.

இவ்விதம் உயர்திணைப் பன்மைப் பெயர்களில் ஆண்களில் பலரையாவது, அல்லது பெண்களில் பலரையாவது குறிக்கும் சொல் பலர்பால் பெயர் எனப்படும்.

பாம்பு—அஃறிணை ஒருமைப் பெயர். அஃறிணைப் பெயர்களில் பலவற்றைக் குறிக்கும் பெயர் பலவின்பால் பெயர் எனப்படும்.

கீழ்க்கண்ட சொற்களின் பால் என்ன என்று கூறு :—

சமுத்திரம், கண்கள், சிறுவர், ஔவையார், பெரியோர், பெண்கள், பெற்றோர், தந்தை, தேனீ.

புத்திசாலி—ஆண் பெண் இரண்டு பாலுக்கும் பொதுவான பெயர்.

---

# 12. நமது தமிழ்நாட்டு வீரர்

| | | |
|---|---|---|
| தோன்றியுள்ள | வேளாள குலம் | பரீட்சை |
| ஆர்வம் | ஆராய்ச்சி | பெருக்கம் |
| துறைமுகம் | சுதேசி | வர்த்தகம் |
| கூட்டுறவு | குழப்பம் | பட்டம் |
| பண்டிதர் | காலமானுர் | நிலவும் |

நம் தமிழ் நாட்டில் தோன்றியுள்ள வீரர்கள் பலர். அவர்களில் சிதம்பரம் பிள்ளை என்பவரும் ஒருவராவார். இவர் திருநெல்வேலி ஜில்லாவில் ஓட்டப்பிடாரம் என்னும் கிராமத்தில் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் உலகநாதப் பிள்ளை. இவர் சைவ வேளாள குலத்தைச் சேர்ந்தவர்.



இவர் ஆங்கிலம் தமிழ் என்ற இரு மொழிகளிலும் சிறந்த அறிவுடையவர்; சட்டப் பரீட்சையிலும் தேர்ச்சி பெற்றவர். இவருக்கு இளமையிலேயே தேச சரித்திரம் படிப்பதிலும்வீரருடைய சரித்திரங்களைப் படிப்பதிலும் பிரியம் அதிகம். ஆகவே, இவர் இளமையிலேயே தேசப் பற்று உடையவராய் விளங்கினுர். நமது தாய் மொழியிடத்தும் இவர் அதிக ஆர்வங்கொண்டவர். தமிழில் பல நூல்களை எழுதியிருக்கிறுர். சில பழைய தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்து, நல்ல முறையில் பதிப்பித்திருக்கிறுர்.

நமது நாட்டில் வியாபாரம் வளர்வதற்கு நமக்குச் சொந்தமான கப்பல்கள் இருக்கவேண்டும் என்பதைச் சிதம்பரம் பிள்ளை உணர்ந்தார். தூத்துக்குடி, வியாபாரப் பெருக்கம் பெற்ற ஒரு துறைமுகப் பட்டினம். இலங்கைக்கு அனுப்பப்படும் பொருள்கள் எல்லாம் தூத்துக்குடி வழியாகவே அனுப்பப்பட்டு வந்தன. தூத்துக்குடிக்கும், கொழும்புக்கும் போகும் வர்த்தகக் கப்பல்கள் சுதேசிக் கப்பல்களாயிருப்பின் நம்மவர்களின் வர்த்தகம் சிறக்கும் எனக் கண்டார். ஆகவே 1908-ம் வருஷம் ஒரு கூட்டுறவுச் சங்கம் அமைத்து, இரண்டு சுதேசிக் கப்பல்களைத் தயார் செய்தார். அவற்றைக் கொழும்புக்கும், தூத்துக்குடிக்கும் ஓட்டினார். இச் செய்கையால் அரசாங்கத்தாருக்கும், ஜனங்களுக்கும் குழப்பம் ஏற்பட்டது. இவரை அரசாங்கத்தார் சிறையில் அடைத்தார்கள். பின்னாள் இவர் சிறைவாசம் செய்ய நேர்ந்தது.

அக்காலத்தில் இவருக்கு அரசாங்கத்தார் பெரிய பட்டங்கள் அளிக்கத் தயாராய் இருந்தார்கள். இவர் பட்டம் பதவிகளை விரும்பவில்லை. விரும்பினால் இவர் பெரிய அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்திருக்கலாம்.

இவர் விடுதலை அடைந்தபின் 1924-ம் வருஷத்திலிருந்து வக்கீல் தொழிலைக் கோவில்பட்டியில் நடத்தி வந்தார். இந்தக் காலத்தில் பல பண்டிதர்களுடன் பழகி வந்தார். இவர் தம்முடைய காலத்தில் மற்றவர்க்கு எப்பொழுதும் உதவி செய்து வந்தார். தமது விருத்தாப்பிய காலத்தில் கோவில்பட்டியிலும் பின் தூத்துக்குடியிலும் வசித்து வந்

தார். 1936-ம் வருஷம் நவம்பர் மாதம் 18 ஆம் நாள் இவர் தமது அறுபத்து ஐந்தாவது வயதில் காலமானார். இவர் புகழ் என்றும் நிலவும்.

### கேள்விகள்

1. சிதம்பரம் பிள்ளை எங்கே பிறந்தார்?
2. அவர் என்ன தொழில் செய்து வந்தார்?
3. அவர் சிறையில் அடைபடக் காரணமென்ன?
4. அவர் எப்பொழுது இறந்தார்?

### பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது:—ஆர்வம், ஆராய்ச்சி, துறைமுகம், சுதேசி, குழப்பம்.

2. குலம், குளம்—அர்த்த வித்தியாசம் விளங்கும்படி தனித் தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

3. கிராமம், இளமை, பழைய, சுதேசி—எதிர்ப்பதங்கள் எழுது.

### இலக்கணம்

எழுவாய் எந்தப் பாலைப் பெற்றுள்ளதோ அதே பாலைப் பயனிலையும் பெற்றிருக்க வேண்டும். பின்வரும் வாக்கியங்களைத் திருத்து:—

இராமன் பந்தை எடுக்கிறது.
மரியாள் பாடுகிறான்.
குதிரை தண்ணீர் குடிக்கிறாள்.
சிறுமிகள் கோலாட்டம் போடுகிறான்.
சிறுமிகள் பந்து ஆடுகிறாள்.
பூமி சூரியனைச் சுற்றி வருகிறான்.

1. சூரியன் உதிக்கிறது. 2. சூரியன் உதிக்கிறான்.

சூரியனை 1-வது வாக்கியத்தில் அஃறிணையாகவும், 2-வது வாக்கியத்தில் உயர்திணையாகவும் கூறியிருப்பதைக் கவனி.

# 13. மதியூகி மந்திரி

| | | |
|---|---|---|
| கல்விமான் | நுட்பம் | சிக்கலான |
| எளிதில் | உத்தமம் | மத்திமம் |
| அதமம் | அறிஞர் | வேறுபாடு |
| தவணை | கொலு | கூர்ந்து |
| ஒப்பானது | சமமானது | அனைவரும் |

முற்காலத்தில் இந்தியாவில் பல இராச்சியங்கள் இருந்தன. அவைகளில் விஜய நகர இராச்சியம் ஒன்று. அதை கிருஷ்ண தேவராயர் என்னும் அரசர் ஆண்டு வந்தார். அவர் கல்வியிற் சிறந்தவர்; பல கல்விமான்களைத் தம் சபையில் வைத்து ஆதரித்து வந்தார். அவரை விஜய நகர மன்னர்களில் மிகச் சிறந்தவர் எனக் கூறுவர்.

அவரது சபையில் அப்பாஜி என்னும் மந்திரி ஒருவர் இருந்தார். அவர் மகா புத்தி நுட்பம் வாய்ந்தவர். எவ்விதச் சிக்கலான விஷயங்களையும் எளிதில் அறிந்து விடுவார். கிருஷ்ண தேவராயர் அப்பாஜியின் புத்தி நுட்பத்தைக் கண்டு சந்தோஷம் அடைவார். சதா இருவரும் சேர்ந்தே இருப்பார்கள்.

அப்பாஜியின் புகழ் நாடெங்கும் பரவிற்று. அக்காலத்தில் டில்லியில் ஆண்டு வந்த பாதுஷா அவரது மதி நுட்பத்தைச் சோதிக்க விரும்பினார். ஆகவே, அவர் ஒரே மாதிரியான மூன்று பொம்மைகளை கிருஷ்ண தேவராயர் சபைக்கு அனுப்பி வைத்தார். "இந்தப் பொம்மைகளில் எது உத்தமமானது? எது மத்திமமானது? எது அதமமானது? என்று கண்டு பிடிக்க வேண்டும். இதைக் கண்டு பிடிப்பவரே மகா அறிஞர்" என்று பாதுஷா சொல்லி அனுப்பி யிருந்தார்.

கிருஷ்ண தேவராயர் அந்த மூன்று பொம்மைகளையும் சபைக்கு எடுத்துச் சென்று சபையாரிடம் காண்பித்தார். அவர்கள் அப்பொம்மைகளில் யாதொரு வேறுபாட்டையும் காணமுடியவில்லை. கடைசியாக அவர் அப்பாஜியை நோக்கினர். உடனே அப்பாஜி "அரசே ஒருநாள் தவணை கொடுத்தால் இப்பொம்மைகளின் வேறுபாட்டைக் கண்டு பிடித்து விடுவேன்" என்று கூறினர்.

மறு நாள் கிருஷ்ண தேவராயர் கொலு இருக்கிறார். அவரைச் சுற்றிச் சபையார் அமர்ந்திருக்கின்றனர். அப்பாஜி பொம்மைகளுடன் அங்கு வந்து, "அரசே பொம்மைகளின் வேறுபாட்டைக் கண்டு பிடித்துவிட்டேன்" என்றார். உடனே அரசர் "எவ்விதம் கண்டு பிடித்தீர்? சொல்லும்" என, அப்பாஜி சொல்லலானர்:

"அரசே, நான் பொம்மைகளை நன்ருகக் கூர்ந்து கவனித்தேன். ஒவ்வொரு பொம்மையின் காதிலும் ஒரு சிறு துவாரம் இருந்தது. அந்தத் துவாரத்தின் வழியாக ஒரு சிறு கம்பியைச் செலுத்தினேன். ஒரு பொம்மையின் காதில் சென்ற கம்பி வாய் வழியாக வெளிவந்தது. இது காதால் கேட்டதை வாயால் வெளிவிடுபவனுக்கு ஒப்பானது. ஆகவே இந்தப் பொம்மை அதமமானது. இரண்டாவது பொம்மையின் ஒரு காதில் சென்ற கம்பி மறு காது வழியாக வெளிவந்தது. இது ஒரு காதால் கேட்டதை மற்ருெரு காதால் விட்டுவிடுபவனுக்கு ஒப்பானது. ஆகவே இது மத்திமமானது.

மூன்ருவது பொம்மையின் காதில் புகுந்த கம்பி வெளி வராமல் அப்படியே நின்றுவிட்டது. இந்தப்

பொம்மை காதால் கேட்டதை மறவாமலும், வெளியிடாமலும் வைத்திருப்பவனுக்குச் சமமானது. ஆகவே, இது உத்தமமானது என்று கூறி, அந்த விடைகளை அப்பொம்மைகளின் மேல் எழுதிப் பாதுஷாவுக்கு அனுப்புங்கள்" என்றார்.

கிருஷ்ண தேவராயருக்கு ஆனந்தம் பொங்கி விட்டது. சபையார் அனைவரும் அதிசயித்தனர். அப்பாஜி கூறியபடி கிருஷ்ண தேவராயர், அம் மூன்று பொம்மைகளையும், பதிலுடன் பாதுஷாவுக்கு அனுப்பினார். பாதுஷா அவரது மதிநுட்பத்தை மெச்சி, அவருக்குப் பல பரிசுகள் வழங்கினார்.

## கேள்விகள்

1. டில்லி பாதுஷா மூன்று பொம்மைகளை எதற்காகக் கிருஷ்ண தேவராயர் சபைக்கு அனுப்பினார்?

2. அப்பொம்மைகளின் வேறுபாட்டை அப்பாஜி எப்படிக் கண்டுபிடித்தார்?

3. 'இது மத்திமமானது' என்பதற்கு அப்பாஜி என்ன காரணம் கூறினார்?

## பயிற்சி

1. முற்காலத்தில் இந்தியாவில் பல இராச்சியங்கள் இருந்தன. அவைகளில் விஜயநகர இராஜ்யம் ஒன்று.—இந்த இரண்டு வாக்கியங்களையும் ஒரே வாக்கியமாக எழுது.

2. முதற்காலம், சந்தோஷம், பல, சேர்ந்து—எதிர்ப்பதங்கள் எழுது.

3. மதி, ஆண்டு—இருபொருள் கூறு.

## இலக்கணம்

'நான் பொம்மைகளை நன்றாகக் கூர்ந்து கவனித்தேன்' என்றார் அப்பாஜி. அப்பாஜி தன்னைக் குறித்துப் பேசும்போது 'நான்' என்று சொல்லுகிறார். நான் என்பது தன்மைப் பெயர் ஆகும்.

நான், யான், நாம், யாம், நாங்கள்—தன்மைப் பெயர்கள். அரசர் அப்பாஜியைப் பார்த்து 'எவ்விதம் நீர் சொல்லும்' என்ருர். அரசர் எதிரிலிருக்கும் அப்பாஜியைப் பார்த்துப் பேசும் போது 'நீர்' என்னும் பெயரை உபயோகிக்கிருர். 'நீர்' என்பது முன்னிலைப் பெயர் ஆகும். நீ, நீர், நீங்கள்—முன்னிலைப் பெயர்கள்.

தன்மை, முன்னிலை அல்லாத பெயர் படர்க்கைப் பெயர் எனப் படும்.

உதாரணம்—அவன், அது, அவள், கல், மாடு முதலியன.

தன்மை, முன்னிலை, படக்கை இம்மூன்றையும் இடம் என்று இலக்கணத்தில் சொல்லுவது வழக்கம்.

கீழ்க்கண்ட பெயர்ச் சொற்களுக்கு இடம் கூறு:—பர்ன பாஸ், கடிகாரம், நான், அது, அவை, தெரு, நீங்கள்.

---

## 14. தபால் கடிதம் சொன்ன கதை

| | | |
|---|---|---|
| காகித ஆலை | எடை போட்டு | கூலியாள் |
| மழமழப்பாக | தோலா | புருக் கூண்டு |
| கடைக்காரன் | தபால் தலை | உரத்த சத்தம் |
| ஆச்சரியமாக | முத்திரை | விஷயங்களை |
| காகித உறை | சற்று | விளையாட்டுச் சாமான் |
| கடிதம் | குலுங்குவது | புடவை |

நான் ஒரு காகித ஆலையில் பிறந்தேன். முதலில் எனக்குக் காகிதம் என்று பெயரிட்டார்கள். அப்பொழுது நான் மிகவும் மழமழப்பாக இருந்தேன். பட்டணத்திலுள்ள ஒரு கடைக்காரன் என்னை வாங்கிக் கொண்டான்.

நான் அந்தக் கடையில் இருக்கும் பொழுது, முருகன் என்னை விலை கொடுத்து வாங்கினுன். முருகன் என்னை நான்கு காகிதத்துண்டுகளாகக் கிழித்தான். அக்காகிதத் துண்டுகளில் ஒன்ருன என்மீது என்ன என்னவோ எழுதினுன்.

எழுதி முடித்ததும் அவன் என்னைக் கொண்டு போய்த் தகப்பனுரிடம் காட்டினுன். அவர் என் மேல் எழுதி இருந்தவைகளை மௌனமாகப் படித்தார். "முருகா, நன்ருகக் கடிதம் எழுதுகிருயே!" என்ருர். அப்பொழுது என் பெயர் காகிதம் அன்று, கடிதம் என்பதை அறிந்து கொண்டேன். முருகன் என்னை நாலாக மடித்தான். ஒரு காகித உறையிலே என்னை அடைத்தான். அந்தக் காகித உறையின் வாயை ஒட்டினுன். நான் அடைபட்டிருந்த உறையின் மேல்,

திரு. கலியாணசுந்தரம்,
11, வடக்கு மாடவீதி,
மயிலாப்பூர், சென்னை.

என்று மேல் விலாசம் எழுதினுன்.

முருகன் என்னை எடுத்துக் கொண்டு தபாலாபீசுக்கு ஓடினுன். அங்கே ஒரு குமாஸ்தா என்னை எடை போட்டுப் பார்த்து, "இது ஒரு தோலா எடை தான் இருக்கிறது. இதற்கு ஒன்றரை அணு தபால் தலை ஒட்டினுல் போதும்" என்ருர். உடனே முருகன் அவரிடம் ஒன்றரை அணு தபால் தலை ஒன்று வாங்கினுன். அதை மேல் விலாசம் எழுதியிருந்த பக்கத்தின் வலது கை மூலையில் ஒட்டினுன். முருகன் என்னைத் தபாலாபீசின் முன் பக்கத்தில் இருந்த தபால் பெட்டிக்குள் போட்டான்.



நான் விழுந்த பெட்டிக்குள் என்னைப் போன்ற பல கடிதங்கள் இருந்தன. சில மணி நேரத்திற்குப் பின் ஒருவன் வந்து, என்னையும் மற்றக் கடிதங்களையும் எடுத்து ஒரு மேசையின்மேல் வைத்தான். பின்பு என் உறையின்மேல் ஒட்டியிருந்த தலையில் ஒரு வட்ட முத்திரை அடித்தான். எல்லாக் கடிதங்களின் மேலும் முத்திரையிட்டு முடிந்த உடனே, அவன் எங்களை ஒரு பையில் இட்டுக் கட்டினான். சற்று நேரத்திற்கெல்லாம் ஓர் ஆள் நாங்கள் இருந்த பையைத் தூக்கிக்கொண்டு ஓடுவதை உணர்ந்தேன். அவன் ஓடியபோது வழி நெடுக 'கணிங்! கணிங்!' என்று மணி குலுங்குவதுபோன்ற சத்தம் கேட்டது. அவன் எங்களைக் கொண்டுபோய் ரயில் ஸ்டேஷனில் போட்டான். ஒரு கூலியாள் எங்களை ஒரு கைவண்டியில் ஏற்றிக்கொண்டு போய் ரயில்வண்டியில் ஓர் அறையில் தள்ளினான்.



நானும் மற்றக் கடிதங்களும் அந்த ரயில் வண்டியில் பிரயாணம் பண்ணினபோது, ஒருவன் நான் இருந்த பையைத் திறந்தான். அதிலிருந்து என்னை எடுத்து ஒரு புருக்கூண்டுபோன்ற ஒரு மர அறைக்குள் வீசி எறிந்தான். அந்த அறையில் என்னைப் போலவே அநேக கடிதங்கள் இருந்தன. அந்தக் கடிதங்களின் மேல்விலாசத்திலும் 'சென்னை'



என்று எழுதியிருந்தது. அந்தக் கடிதங்களும் என்னைப்போலவே சென்னைக்குத்தான் போகின்றன என்பதை நான் அறிந்துகொண்டேன். நான் இருந்த மர அறை நிறைந்த உடனே, அந்த ஆள் என்னையும் மற்றக் கடிதங்களையும் எடுத்து ஒரு பையில் அடைத்துக் கட்டி விட்டான்.

II

நாங்கள் கடைசியாகச் சென்னைப் பட்டணம் வந்து சேர்ந்தோம். சென்னைக்கு வந்ததும் நான் இருந்த பையையும் இன்னும் பல பைகளையும் மோட்டார் வண்டியில் ஏற்றித் தபாலாபீசுக்குக் கொண்டுபோனார்கள். நான் தபாலாபீசுக்கு வந்து சேர்ந்ததும் பையைத்திறந்து என்னை வெளியேஎடுத்தார்கள்; என்மேல் ஒரு முத்திரை அடித்தார்கள். பின்பு தபால்காரன் என்னை எடுத்து மயிலாப்பூரில் வடக்கு மாடவீதியில் 11 நம்பர் வீட்டிற்குக் கொண்டு போனான். அங்கே ஒரு ஸ்திரீ என்னைக் கையில் வாங்கினாள். அதை அவள் உள்ளே கொண்டுபோய், ஒரு சிறுவனிடம் கொடுத்தாள். அதை வாங்கினவுடன் அவனுக்கு, உண்டான சந்தோஷத்திற்கு அளவே இல்லை. அவன் அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு, "மாமா, மாமா! தம்பி முருகன் கடிதம் எழுதியிருக்கிறான்." என்று கத்திக்கொண்டே ஓர் அறைக்குள் போனான். அவன் அங்கிருந்தவர்களுக்குக் கடிதத்தை உரத்த சத்தமாகப் படித்துக்



காட்டினான். அந்தக் கடிதத்தில் கீழ்க்கண்டபடி எழுதி இருந்தது.

112, ரத வீதி,
மதுரை.
*20, அக்டோபர், 1945.*

என் அன்புள்ள அண்ணாவுக்கு,

தம்பி முருகன் எழுதுவதாவது: நீ அப்பாவுக்கு எழுதின கடிதம் கிடைத்தது. நாங்கள் எல்லோரும் அதை வாசித்து எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டோம். நீ இந்த வருஷம் பரீக்ஷையில் தேறு வாய் என்பதைக் கேட்டபோது அப்பாவுக்கு உண் டான சந்தோஷத்தைச் சொல்லவே முடியாது. நான் உன்னை ஒருநாளும் மறக்கிறதே இல்லை. நீ தோட் டத்தில் நட்டுவைத்த மாமரத்திற்கு நான் தினந் தோறும் தண்ணீர் வார்த்து வருகிறேன். அது இந்த வருஷம் பூத்திருக்கிறது. நீ பரீக்ஷையில் தேறி வீட்டுக்குத் திரும்பி வரும்போது அந்த மரத்தில் காய்கள் இருக்கும். முதலில் பழுக்கும் பழத்தை நீ தான் பறித்து அப்பாவிடம் கொடுக்கவேண்டு மென்று விரும்புகிறேன்.

நீ அனுப்பின கதைப் புத்தகங்களை எல்லாம் வாசித்தேன். அந்தப் புத்தகங்களை நான் வாசித்த போதெல்லாம் உன் அன்பை அடிக்கடி நினைத்தேன்.

தங்கை மீனாக்ஷி நீ சொன்ன கதைகளை அடிக்கடி சொல்லுகிறாள். எந்தக் கதை சொன்னாலும், 'இது அண்ணா சொன்ன கதை' என்று சொல்லுகிறாள். நீ அவளுக்கு அனுப்பின விளையாட்டுச் சாமான்களை அவள் போகிற இடங்களுக்கு எல்லாம் எடுத்துக் கொண்டுபோய், "இதெல்லாம் என் அண்ணா அனுப் பினான்" என்று சொல்லுகிறாள்.

அம்மாவுக்கு நீ வாங்கி அனுப்பின புடவை நிரம்பப் பிடித்திருக்கிறது. அப்பா அதற்குப் பணம் இன்னும் இரண்டு நாட்களில் அனுப்பி விடுவார். நாங்கள் எல்லோரும் நீ எப்பொழுது வீட்டிற்கு வருவாய் என்று வெகு ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். நான் வெகு ஆவலாக உன் அன்பு மிக்க கடிதத்தை எதிர் பார்க்கிறேன்.

இப்படிக்கு,
உன் அன்பு மிக்க தம்பி,
**முருகன்.**

## கேள்விகள்

1. முருகன் எழுதின கடிதம் எந்த எந்த வண்டிகளில் பிரயாணம் செய்தது?
2. அது எத்தனை தடவை பைவிட்டுப் பை மாறியது?
3. அதன்மேல் எத்தனை தடவை முத்திரை அடித்தார்கள்?
4. கடிதத்தின் உறையின்மேல் என்ன ஒட்டி இருந்தது?

## பயிற்சி

1. மழமழப்பாக—எதிர்ப்பதம் என்ன?
2. கிளி, கிழி; உரை, உறை; அறை, அரை—ஜதை ஜதையாகக் கொடுக்கப்பட்டுள்ள பதங்களின் அர்த்த வித்தியாசத்தை விளக்கு.
3. கடிதம், கூலியாள்—பன்மையில் எழுது.
4. பூத்திருக்கிறது—பிரித்து எழுது.

## இலக்கணம்

ஒரு வாக்கியத்தின் எழுவாய் தன்மை, முன்னிலை, படர்க்கை இவற்றுள் எந்த இடத்தைக் குறிக்கிறதோ அதே இடத்தைப் பயனிலையும் குறிக்கவேண்டும்.

1-வது பத்தியிலும் 2-வது பத்தியிலும் உள்ளவைகளுள் பொருத்தமானவற்றைச் சேர்த்து வாக்கியங்கள் எழுது:—

| 1-வது பத்தி | 2-வது பத்தி |
|---|---|
| நான் | படிக்கிறாய் |
| நீ | ஓடுகின்றன |
| நீர் | படிக்கிறான் |
| நீங்கள் | படிக்கிறார்கள் |
| அவன் | பறக்கின்றன |
| அவள் | படிக்கிறேன் |
| அவர்கள் | படிக்கிறீர்கள் |
| அது | படிக்கிறாள் |
| காகங்கள் | படிக்கிறீர் |
| குதிரைகள் | ஓடுகிறது. |

# 15. தேனீ

| | | |
|---|---|---|
| புலமை | அனைவரையும் | சால்பு |
| நெடுந்தகையார் | அணுவணுவாய் | மது |
| ஊன் | அரிய | புலர்வதன்முன் |
| அளித்து | கணப்பொழுது | பூங்கா |
| நிதம் | கனத்தபொருள் | ஏலாதே |

அறை யறையாய்க் கூட்டினை
அழகுடனே அமைக்கவே
நிறை புலமை ஊட்டிய
நெடுந்தகை யார் சொல்லுவாய்? 1
தேன் சேர்த்து வைப்பதற்குத்
தேர்ந்து நல் மெழுகதனை
ஊனுருக்கி உண்டாக்க
உரைத்தவரைக் கூறிடுவாய்! 2
ஆரமுதம் அளித்து நிதம்
அனைவரையுங் காத்திடினும்
வேறு விஷந் தந்து நீ
மாறுபட லாகுமோ? 3
அணு வணுவாய்ச் சேர்த்த நின்
அரிய பொருள் அனைத்துமே
கணப்பொழுதில் கைவிட்ட
காரணத்தைக் காட்டிடுவாய். 4
கால் காசும் முடக்காது
கனத்த பொருள் ஆக்குதற்கு
சால்புடனே நீ யறிந்த
சங்கதியைச் சொல்லிடுவாய். 5
மலர் தோறும் மதுவெடுத்து
மண்ணுள்ளோர் வாழ்ந்திடவே
புலர்வதன்முன் எழுந்திருந்து
பூங்காவிற் செல்லுகின்றாய். 6

உன்னைப்போல் உழைத்திடவே
ஒருவர்க்கும் ஏலாதே
நின்னைப்போல் வருவாயை
நிலமதிலே பெற்றவர் யார்? 7

வித்வான் திரு. எஸ். உமைதாணுப் பிள்ளை.

### கேள்விகள்

1. தேனீக்களின் கூடு எவ்விதமிருக்கிறது?
2. தேனீக்கள் பொழுது புலர்வதன் முன் எழுந்திருந்து எங்கே செல்லுகின்றன? ஏன்?
3. தேனீக்கள் நமக்குச் செய்யும் நன்மை யென்ன? தீமை என்ன?
4. தேனீக்களைப் பார்த்து நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டிய நீதி யாது?

### பயிற்சி

1. அறை, அரை; உரை, உறை—அர்த்த வித்தியாசம் என்ன?
2. உரைத்தவரைக் கூறிடுவாய்—எழுவாய் எது?

### இலக்கணம்

1. நீ தேன் வாங்கினாயா? 2. நான் ஒரு தேன் கூட்டைப் பார்த்தேன்—இந்த வாக்கியங்களிலுள்ள பெயர்களின் இடங்களை எழுது.

---

# 16. காகிதம்

| | | |
|---|---|---|
| வெண்மையாக | நீக்க | தேயம் |
| பளப்பளப்பாக | கலந்த | எரிமலை |
| வைக்கோல் | வழுவழுப்பாக | பூகம்பம் |
| கந்தைத் துணி | பத்திரிகைகள் | விற்பனை |
| ஆலைகள் | பிரசுரம் செய்ய | அலங்காரம் |
| முதன் முதலில் | சுருள் | அன்னிய நாடு |
| போக்க | சொற்பம் | பயன் |

நாம் இப்போது வாசிக்கும் புத்தகம் செய்ய உபயோகமான காகிதம் எங்கிருந்து வந்தது ? எந்த எந்தச் சாமான்களைச் சேர்த்துக் காகிதம் செய்கிறார்கள் ? பார்க்க வெகு வெண்மையாகவும் பளபளப்பாகவும் உள்ள காகிதம், உண்மையில் வைக்கோல், கந்தைத் துணி, மிருதுவான மரம் முதலிய பொருள்களால் செய்யப்படுகிறது.

காகிதம் செய்யும் ஆலைகளில் கந்தைத் துணிகளை விதம் விதமாகப் பிரிக்கிறார்கள். இந்தத் துணிகளை முதன் முதலில் தூசி போக்கும் இயந்திரத்திற்குள் போட்டுச் சுத்தம் செய்கின்றனர். பிறகு அவை கொதிக்கும் நீரிலிட்டுச் சுத்தம் செய்யப்படுகின்றன. ஆனால், துணிகளில் உண்டான நிறம் மாறாமலிருக்கும். நிறத்தைப் போக்குவதற்கும், எண்ணெய், கொழுப்பு முதலிய அழுக்கை நீக்குவதற்கும், சோடாவும் சுண்ணும்பும் கலந்த தண்ணீரில் கந்தைகளை ஊறவைப்பார்கள்.

இவ்வாறு சுத்தி செய்யப்பட்டபின் கந்தைகள் கூழாக்கப்படுகின்றன. ஓர் இயந்திரம் உண்டு. அதில் கூர்மையான பற்கள் உள்ள சக்கரம் இருக்கும். சுத்தம் செய்து ஊறவைத்த கந்தைகளை அந்த இயந்திரத்தின் உதவியால் நையவைத்து அரைத்துக்

கூழாக்குவார்கள். இம்மாதிரியாக, மிருதுவான மரத்தையும் கோரைப்புல்லேயும் அரைத்துக் கூழாக்கலாம். இவ்விதம் தயாரிக்கப்படும் கூழைக் கொண்டு காகிதம் செய்கிருர்கள்.

இருவகையாகக் காகிதம் செய்யலாம். ஒன்று கையால் செய்தல்; மற்ருென்று இயந்திரங்களின் உதவியால் செய்தல். கையால் செய்வது அவ்வளவு சுத்தமாகவும் வழுவழுப்பாகவும் இராது. இயந்திரம் வெகு வேகமாகப் பளபளப்புள்ள காகிதம் செய்யும். காகிதம் பளபளப்பாக இருக்கும் பொருட்டு ஒருவிதப் பிசின் உபயோகமாகிறது. பிசின் காகிதத்தை ஊருமல் இருக்கச் செய்கிறது.

காகிதம் பலவித உபயோகங்களுக்கு உதவும். காகிதம் சாதாரணமாகப் புத்தகங்கள் செய்வதற்கு உதவுவது எல்லோருக்கும் தெரிந்ததே. பத்திரிகைகள் பிரசுரம் செய்வதற்கும் காகிதம் உதவுகிறது. பத்திரிகைகளுக்கென்று காகிதம் ஒரு பருமனுள்ள இரும்புக் கம்பியில் சுற்றப்பட்டு வரும். அப்போது அது அநேக மைல்கள் நீளமுள்ளதாக இருக்கும். ஆனல் நம் நாட்டில் இப்படிப்பட்ட நீளமுள்ள காகிதச் சுருள்களே உபயோகப்படுத்தும் பத்திரிகை தொழிற்சாலேகள் வெகு சொற்பம்.

நமது தேசத்தின் வடகிழக்கில் உள்ள ஜப்பான் தேசத்தில் வீடுகள் காகிதத்தால் கட்டப்படுகின்றன. அவர்கள் இவ்வாறு செய்வதன் காரணம் என்ன? அத்தேயத்தில் எரிமலேகளும், பூகம்பங்களும் அதிகம். ஆதலால் நகரங்களும் அவற்றிலுள்ள வீடுகளும் நாசமாகின்றன. கல்வீடுகளேத் திரும்பத் திரும்பக் கட்டுவது அதிகமான பணச் செலவிற்கு

இடமாகும். காகித வீடுகள் கட்டுவது அத்தனை கஷ்டம் அன்று; செலவும் குறைவாக இருக்கும்.

ஜப்பானில் காகித விளக்குகள் அதிகம். அங்கிருந்து நம்முடைய தேசத்திற்கும் அந்த விளக்குகள் விற்பனைக்கு வருகின்றன. அந்நாட்டார் காகித விசிறிகளையும், வீடுகளிலும் கோவில்களிலும் அலங்காரம் செய்யக் கூடிய காகித மாலைகளையும், பூச்செடிகளையும் ஏராளமாகச் செய்து உபயோகிக்கிறார்கள். அவைகளை அந்நிய நாடுகளுக்கும் அனுப்புகிறார்கள்.

ஜப்பானுக்குக் கிழக்கிலுள்ள சீன தேசத்திலும் இம்மாதிரியாகக் காகிதத்தைக்கொண்டு விளக்கு, விசிறி, மாலை முதலியன செய்கிறார்கள். ஐரோப்பிய நாடுகளில் காகிதம் இதைவிட அதிகமாகப் பயன்பட்டு வருகின்றது. அங்குக் காகிதத் தட்டுகள், விளையாட்டுச் சாமான்கள் முதலியன செய்கிறார்கள்.

நாகரிகம் எவ்வளவு முன்னேற்ற மடைகின்றதோ அவ்வளவு அதிகமாகக் காகிதமும் பற்பல விஷயங்களுக்கு உபயோகமாகின்றது. இப்பொழுது நடைபெற்ற யுத்தத்தின் காரணமாகக் காகிதம் நம் எல்லோருக்கும் அதிகம் கிடைப்பதற்கில்லை. ஆதலால், கிடைக்கும் காகிதத்தை வீணாகச் செலவு செய்தல் கூடாது. கழிவுக் காகிதங்கள் மீண்டும் காகிதம் செய்ய உதவும். ஆகையால், கழிவுக் காகிதங்களை வீணாக்காமல் சேகரித்துக் காகிதத் தொழிற்சாலைக்கு அனுப்பவேண்டும்.

### கேள்விகள்

1. காகிதம் செய்ய உதவும் பொருள்கள் எவை?
2. காகிதம் செய்யும் தொழிற்சாலைகளில் கந்தைத் துணிகள் எவ்விதம் சுத்தம் செய்யப்படுகின்றன?

3. சுத்தம் செய்யப்பட்ட கந்தைகளை எவ்விதம் கூழாக்குகிறார்கள்?

4. காகிதம் எத்தனை வகைகளில் செய்யப்படுகிறது?

5. கையால் செய்யப்படும் காகிதத்திற்கும் இயந்திரத்தால் செய்யப்படும் காகிதத்திற்கும் என்ன வித்தியாசம்?

6. காகிதம் செய்வதில் ஒரு விதப் பிசினை ஏன் உபயோகிக்கிறார்கள்?

7. காகிதம் என்னென்ன விதங்களில் உபயோகப்படுகின்றது?

8. பத்திரிகைகளுக்கு உபயோகிக்கும் காகிதம் எவ்விதமிருக்கும்?

9. ஜப்பானியரும் சீனரும் காகிதத்தை என்னென்ன வேலைகளுக்கு உபயோகிக்கிறார்கள்?

10. ஜப்பானியர் ஏன் காகித வீடுகளைக் கட்டிக்கொள்கிறார்கள்?

11. கழிவுக் காகிதங்களை நாம் என்ன செய்யவேண்டும்? ஏன்?

பயிற்சி

1. எதிர்ப்பதம் எழுது:—உண்மை, மிருதுவான, சுத்தம், உண்டு, இருக்கும், கூர்மையான, வழுவழுப்பாக, சொற்பம்.

2. தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுது:—விதம் விதமாக, முதன் முதலில், திரும்பத்திரும்ப, ஏராளமாக, பற்பல.

3. பற்கள், நாடுகள், ஆலைகள்—ஒருமையில் எழுது.

4. மாலை—இரண்டுவிதமான அர்த்தம் சொல்லு.

5. மிருதுவான மரத்தையும் கோரைப் புல்லையும் அரைத்துக் கூழாக்கலாம்.—இந்த வாக்கியத்தை இரண்டு சிறு வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

இலக்கணம்

கந்தைத் துணி, வைக்கோல், மரக்கட்டை, கோரைப்புல் முதலிய பொருள்கள் காகிதம் செய்ய உதவுகின்றன. இந்த வாக்கியத்தில் பல பெயர்ச்சொற்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்திருப்பதையும், அவைகளைப் பிரிப்பதற்குக் காற்புள்ளி (,) என்ற நிறுத்துக்குறி இருப்பதையும் கவனி.

கீழ்க்கண்ட வாக்கியத்தில் தகுந்த இடங்களில் காற்புள்ளி என்ற நிறுத்தல் குறியை இடு.

ஜப்பானியர் காகிதத்தால் மாலைகள் பூஞ்செடிகள் விசிறிகள் விளக்குகள் முதலியன செய்கிறார்கள்.

---

## 17. அகங்காரங் கொண்ட ஞானி

| | | |
|---|---|---|
| தோணி | அக்கரை | பழித்து |
| சகல | தண்டு வலித்து | அகங்காரம் |
| சாஸ்திரம் | தொடங்கினுன் | அகற்றுவது |
| கற்றவர் | வார்த்தையாட | எண்ணம் |
| இணையானவர் | தலைப்பட்டார் | சடுதியில் |
| செருக்கு | சர்வ முட்டாள் | அவஸ்தை |
| நாஞ விஷயங்கள் | ஒருகால் | மொழிகள் |
| புகழ். | பொறுமை | மன்ருடினுர் |

முன்னெரு காலத்தில் ஞானி ஒருவர் இருந்தார். அவர் சகல சாஸ்திரங்களையும் கற்றவர். ஏட்டுக் கல்வியில் அவருக்கு இணையானவர்கள் எவரும் இல்லை என்று செருக்கடைந்திருந்தார். அவர் நகரங்கள் தோறும் சென்று நாஞவிஷயங்களைப்பற்றிப் பிரசங்கம் செய்வார். அதனுல் அவர் ஒருவாறு புகழ் பெற்றுர். ஏற்கெனவே கல்வியால் செருக்குற்ற ஞானியார், தமக்குப் புகழ் பெருகுவதைக்கண்டு, பெருஞ் செருக்கில் ஆழ்ந்தார்.

ஒரு நாள் அவர் ஓராற்றைக் கடந்து அக்கரை செல்வது அவசியமாயிற்று. அவர் ஆற்ருேரத்தில் இருந்த தோணிக்காரனைக் கண்டுபேசி, கூலி கொடுத்துப் படகில் ஏறி உட்கார்ந்தார். படகுக்காரன் தண்டு வலித்துப் படகை ஓட்டத் தொடங்கினுன். அச்சமயம் அவர் அவனேடு வார்த்தையாடத் தலைப்பட்டார்.

ஞானி :—அடா, படகுக்காரா! உனக்கு வான சாஸ்திரம் தெரியுமா?

படகோட்டி :—ஐயா, நான் படித்தவன் அல்லன்; எனக்கு ஒரு சாஸ்திரமும் தெரியாது.

ஞானி :—சீ! நீ ஒரு மனிதனு? வான சாஸ்திரம்

தெரியாதவன் முக்கால் மனிதனே. உனக்குப் பூமி சாஸ்திரமாவது தெரியுமா?

படகோட்டி:—ஒரு சாஸ்திரமும் அறியேன் என்று சொல்விட்டேனே. எனக்கு நம்முடைய ஊர் தான் தெரியும். பூமி சாஸ்திரம் தெரிந்திருந்தால் இத் தொழிலோ செய்வேன்!

ஞானி:—சீ! சீ!! நீ எவ்வளவு கேவலமான மனிதனுய்க் காணப்படுகிருய். உன்னை அரை மனிதன் என்றே கூறுவேன். நல்லது, உனக்குக் கணித சாஸ்திரமேனும் தெரியுமா?



படகோட்டி:—ஐயா, சாஸ்திரங்களுக்கும் எனக்கும் வெகு தூரம். நீங்கள் சகல சாஸ்திரங்களும் படித்திருக்கிறீர்கள் போலும்.

ஞானி:—சீ! சீ!! நீ மனிதனு? மாடா? கேவலம் சர்வ முட்டாள். நீ மனிதனேயல்ல; ஒருகால் மனிதனுயினும் கால் மனிதனேயன்றி மற்றன்று.

படகோட்டி ஞானி பேசின வார்த்தைகளைப் பொறுமையோடு கேட்டான். ஞானி தன்னைப்

பழித்துக் கூறியதற்காக மனம் வருந்தினன். அவர் தம் அகங்காரத்தை அகற்றுவது எவ்வாறு என்று யோசித்தான். முடிவில் அவனது மனத்தில் ஓர் எண்ணம் உதித்தது. ஆற்றின் மத்தியில் தோணி சென்று கொண்டிருக்கும்போது, சடுதியில் தோணியைக் கவிழ்த்து விட்டான். ஞானியார் ஆற்றில் வீழ்ந்து, நீந்தத் தெரியாமல் அவஸ்தை அடைந்தார். "தம்பி! தம்பி! அதிகம் படித்தவன் நீந்தப் படித்தேன் இல்லையே! தயவு செய்து என்னைத்தூக்கி விடு!" என்று கெஞ்சினர். அப்பொழுது படகோட்டி, "நான் உமக்குத் தம்பி ஆவேனே? நீர் முழு மனிதராயிற்றே? நானே கால் மனிதன். கால் மனிதன் முழு மனிதனைத் தூக்க முடியுமோ?" என்ருன்.

பிறகு ஞானியார் தகாத மொழிகள் சொன்னது பற்றி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, தம்மைத் தூக்கி விடும்படி மன்ருடினர். அதன்மேல் தோணிக்காரன் கவிழ்ந்த தோணியை நிமிர்த்தி, அவரைத் தூக்கித் தோணியில் ஏற்றிச் சென்ருன். அதுமுதல் ஞானி தமது செருக்கடங்கி வாழ்ந்தார். ஆதலால், மாணவர்களே! எல்லாம் தெரிந்தவரும் ஒன்றுந் தெரியாதவரும் உலகில் இல்லை என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

### கேள்விகள்

1. ஞானி செருக்கடையக் காரணங்கள் எவை?
2. ஞானி படகோட்டியைப் பழித்துக் கூறியது எவ்விதம்?
3. படகோட்டி ஞானியின் அகங்காரத்தை அடக்க என்ன தந்திரம் செய்தான்?
4. ஆற்றில் விழுந்த ஞானி படகோட்டியை வேண்டிக் கொண்டது என்ன? படகோட்டி என்ன பதில் சொன்னன்?

5. ஞானி மன்னிப்புக் கேட்டுக்கொண்ட பிறகு படகோட்டி என்ன செய்தான்?

6. பின்னர் ஞானி எவ்விதம் வாழ்ந்து வந்தார்?

7. இப்பாடத்திலிருந்து நீங்கள் அறியும் படிப்பினை யாது?

## பயிற்சி

1. பதம் பிரித்து எழுது:—ஓராறு, ஆற்றோரம், மற்றன்று.

2. சந்தி சேர்த்து எழுது:—புகழ்+பெற்றார்; படகில்+ஏறி; படித்தவன் + அல்லன்; தன்னை + புழித்து; மன்னிப்பு + கேட்டு; உலகில் + இல்லை.

3. கரை, கறை—அர்த்த வித்தியாசம் என்ன?

4. கடந்து, வார்த்தையாட, பொறுமையோடு, முடிவில், தயவு செய்து—சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

## இலக்கணம்

ஞானி படகுக்காரனை நோக்கி, "அடா, படகுக்காரா! உனக்கு வான சாஸ்திரம் தெரியுமா?" என்று கேட்டார்.

மேற்கண்ட வாக்கியத்தில் ஞானி படகுக்காரனிடம் நேரில் சொன்னது தடித்த எழுத்துக்களால் அச்சிட்டிருப்பதைக் கவனி. அதன் ஆரம்பத்தில் "இக்குறியும் முடிவில்" இக்குறியும் இடப்பட்டிருக்கின்றன. இக்குறிகளுக்கு மேற்கோள் குறிகள் என்று பெயர். மேற்கோள் குறிகளுக்கு உட்பட்ட பேச்சு நேர்முகப் பேச்சு எனப்படும்.

சீ! சீ!! நீ ஒரு மனிதனா?—இதில் சீ! சீ!! என்பன வெறுப்பைத் தெரிவிக்கின்றன! இக்குறிப்புக்கு வியப்புக் குறி என்றுபெயர். இது ஆச்சரியம், துக்கம், வெறுப்பு முதலியவற்றைக் குறிக்கும் சொல் அல்லது வாக்கியத்தின் கடைசியில் இடப்படும்.

கீழ்க்கண்ட வாக்கியத்தில் செங்குத்துக் கோடு போட்டுள்ள இடத்தில் தகுந்த நிறுத்துக் குறியை இட்டு வாக்கியத்தை எழுது:

படகுக்காரன் ஞானியைப் பார்த்து | ஐயா | தாங்கள் எல்லா சாஸ்திரங்களும் படித்திருக்கிறீர்களா | என்று கேட்டான்.

---

## 18. சிக்கனம்

| | | |
|---|---|---|
| சிக்கனம் | மீத்து வைத்த | கௌரவம் |
| ஜாக்கிரதையாக | வரவு | ஊழியன் |
| செட்டாக | நஷ்டம் | ஒப்புவிக்க |
| சீவியம் | திண்ணம் | ஆடம்பரம் |
| திரை கடல் | உணர்ந்த | ஆஸ்தி |
| அஃகம் | குத்தகை | உத்தமம் |
| திரவியம் | கடன்காரன் | சிறு பிராயம் |
| அனுவசியம் | உழைப்பாளி | க்ஷேம நிதி |

பிள்ளைகளே, நம்மிடம் உள்ள பொருளை ஜாக்கிரதையாகக் காப்பாற்றிச் செட்டாகச் செலவிட வேண்டும்.

மனிதனுக்குப் பணம் மிகவும் அவசியம். பணத்தால்தான் சீவியத்திற்குத் தேவையான உணவு உடை முதலியவற்றை அடையலாம். 'திரை கடலோடியும் திரவியம் தேடு,' 'அஃகமும் காசும் சிக்கெனத்தேடு,' 'தேடா தழிக்கின் பாடாய் முடியும்' என்ற நீதி வாக்கியங்கள், நாம் பணத்தைத்தேட வேண்டுமென்றும், செட்டாகச் செலவிடவேண்டுமென்றும் நமக்குக் கற்பிக்கின்றன.

அனுவசியமாகச் செலவு செய்தால் பெருங் கஷ்டத்திற்கு இடமாம். மேலும் நமக்குக் கஷ்டம் நேர்ந்தால் அக்காலத்தில் நமக்கு உதவுவது, நாம் செட்டாகச் செலவு செய்து மீத்து வைத்த பொருளே ஆகும். தேனீக்களும் எறும்புகளும் கூட ஆகாரத்தைப் பிற்காலத்திற் கென்று சேர்த்துவைத்துக் கொள்ளுகின்றன.

ஒருவன் தனது வரவிற்கு மிஞ்சிச் செலவு செய்வானானால், அவன் பற்பல விதமான கஷ்டங்களுக்குள்ளாவான் என்பது திண்ணம்.

இதன் உண்மையை உணர்த்த ஒரு கதையுண்டு. ஒரு பிரபு தமது வரவிற்கு மேல் செலவு செய்து வந்தார். அதனால் அவர் கடன்காரராகி விட்டார். தமது நிலங்களை ஒரு குடியானவனிடம் குத்தகைக்கு விட்டார். அக்குடியானவன் நல்ல உழைப்பாளி; வெகு சிக்கனமாகச் செலவு செய்பவன். சில வருஷங்கள் சென்றதும் குடியானவன் கையில் பணம் மிகுந்தது. பிரபுவின் நிலம் முழுவதையும் அவன் வாங்கிக் கொண்டான். ஆனபடியால் பிரபு தமது கௌரவம் இழந்து தம் ஊழியனிடம் நிலத்தை ஒப்புவிக்க வேண்டியதாயிற்று. இது வரவிற்குத் தக்கபடி செலவு செய்யாததால் நேர்ந்த பலனன்றோ? ஆகையால் ஆடம்பரம், வீண் செலவு ஆகிய இவைகளை ஒழிக்கவேண்டும்.

நமது தேசத்தில் சிலர் வரவிற்குமேல் ஆடம்பரத்தில் செலவு செய்து கடன் வாங்குவதால், அவர்களுடைய ஆஸ்தியைக் கடன்காரர் எடுத்துக் கொள்வதைப் பார்க்கிறோம்.

ஆகையால், நீங்கள் சிறு பிராய முதல் பணத்தை அனுவசியமான வழிகளில் செலவிடாமல், செட்டாக இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். பலர்க்கும் உபயோகமாகும்படி செலவிடல் உத்தமம். 'தனந்தேடி உண்ணுமல் புதைக்க வேண்டாம்' என்பதையும் ஞாபகத்தில்வைத்துக்கொள்ளவேண்டும். பணத்தை மூன்றுகப் பிரித்து தருமத்தில் செலவிடுவதும், தனக்கென்றும் மாதா பிதாக்களுக்கென்றும் செலவு செய்வதும், வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்பதென்றும், குழந்தைகள் படிப்பதற்குச் செலவிடுவது பிற்காலத்திற்கு உபயோகமாகும்படி சேகரிக்கும் க்ஷேம நிதியென்றும் பெரியோர்கள் மொழிந்திருக்கின்ற

னர். இதன் பொருள் என்ன என்று யோசித்துப் பாருங்கள்.

### கேள்விகள்

1. மனிதனுக்குப் பணம் ஏன் அவசியம்?
2. பணத்தைத் தேடவேண்டும், செட்டாகச் செலவிட வேண்டும் என்பதைத் தெரிவிக்கும் நீதி வாக்கியங்களைச் சொல்லு.
3. சிக்கனமாகச் செலவு செய்வதால் ஏற்படும் நன்மை என்ன?
4. வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்வதால் ஏற்படும் கஷ்டம் என்ன? ஓர் உதாரணத்தால் விளக்கு.
5. பணத்தைச் செலவிடும் விதத்தை எவ்விதங்களில் பிரித்துக் கொள்ளலாம்?

### பயிற்சி

1. அர்த்தம் எழுது:—திரை கடல், அஃகம், திண்ணம், ஊழியன், உழைப்பாளி.
2. மாதா, பிதா——ஒரே வார்த்தை என்ன?
3. திரை——இரு பொருள் கூறு.
4. ஜாக்கிரதை, அனுவசியம், வரவு, லாபம்——எதிர்ப்பதம் எழுது.
5. வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்தால்——வாக்கியத்தைப் பூர்த்தி செய்.

### இலக்கணம்

1. பிரபு நிலங்களை விற்கிறார்.
2. பிரபு நிலங்களை விற்றார்.
3. பிரபு நிலங்களை விற்பார்.

மேற்கண்ட ஒவ்வொரு வாக்கியத்திலுமுள்ள வினைச் சொல் எவ்வெக்காலங்களைக் குறிக்கின்றன?

'விற்கிறார்' என்பது இப்பொழுது நடைபெறும் காலம். அதாவது நிகழ் காலத்தைக் குறிக்கிறது.

'விற்றார்' என்பது நடைபெற்ற காலத்தை அதாவது இறந்த காலத்தைக் காட்டுகிறது.

'விற்பார்' என்பது இனிவரும் காலத்தை அதாவது எதிர் காலத்தைத் தெரிவிக்கிறது.

ஆகவே, வினைச் சொல்லின் காலம்—1 நிகழ் காலம், 2 இறந்த காலம், 3 எதிர்காலம் என மூன்று வகைப்படும்.

கீழ்க்கண்ட வினைச் சொற்களின் காலத்தைச் சொல்லு:— வந்தான், படிக்கிறான், ஓடுகிறான், பாடினார்கள், வெட்டினான், வருவான், அடித்தான், அடிப்பான்.

குடியானவன் வயலை உழுதான்.—இந்த வாக்கியத்திலுள்ள வினைச் சொல் என்ன காலத்தில இருக்கிறது.

இந்த வாக்கியத்தை மற்ற இரண்டு காலங்களிலும் எழுது.



## 19. வெளவால்

| | | |
|---|---|---|
| வேளை | சுயேச்சயாய் | எதிர்க்கும் |
| அங்குமிங்கும் | இரை | வல்லமை |
| பக்ஷி | பாழடைந்த | தன்மை |
| கேடு | இறுக | இனம் |
| விளைவிப்பது | சஞ்சரிக்கும் | கனிவர்க்கம் |

சில சமயம் மாலை வேளையில் வெள்வால் வேகமாக அங்குமிங்கும் பறந்து செல்வதைக் காணலாம். வெளவால் பார்வைக்குப் பக்ஷியைப்போல் இருக்கும். ஆனால் உண்மையில் அது பக்ஷியுமல்ல, மிருகமுமல்ல. அது பறவையைப்போல் முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பதில்லை. மிருகத்தைப்போல் குட்டிபோட்டுக் குட்டிகளுக்குப் பாலூட்டி வளர்க்கும். வெளவாலுக்கு வாயில் பற்கள் உண்டு. வெளவாலின் உடல் பறவையின் உடலைப் போல் சிறகுகளால் மூடப்படாமல், மெல்லிய உரோமத்தால் மூடப்பட்டிருக்கிறது. அது உருவத்திலும் நிறத்திலும் சுண்டெலியை ஒத்திருக்கும். அதற்குத் தோலால் அமைந்த இரண்டு இறக்கைகள் உண்டு.

வெளவால் பகற் காலத்தில் வெளியில் வருவதில்லை. அதன் கண் சூரிய வெளிச்சத்தைத் தாங்க முடியாது. சூரிய வெளிச்சம் அதன் கண்ணைக் கூசப்பண்ணுகிறது. ஆனால் இரவில் சந்திர வெளிச்சமும், விளக்கு வெளிச்சமும் அதன் கண்ணுக்கு எத்

தகைய கேட்டையும் விளைவிப்பதில்லை. ஆகையால், அது இராக்காலத்தில் சுயேச்சையாய் இரை தேடித் திரிகின்றது. இக்காரணம் பற்றியே வெளவால் இருண்ட மரப்பொந்துகளிலும் பாழடைந்த வீடுகளிலும், குகைகளிலும் இருளடர்ந்த காட்டிலுள்ள மரக்கிளைகளிலும் வசிக்கின்றது. நமது நாட்டில் வெளவால் வருஷம் முழுவதும் இரவில் வெளிப்படும். ஆனால் குளிர் நிறைந்த நாட்டில் குளிர்கால முழுவதும் வெளவால் வெளிப்படாது. மரக்கிளையைத் தன் கால் நகங்களால் இறுகப் பற்றிக் கொண்டு தொங்கும். இவ்வாறு குளிர் காலம் முழுவதையும் தூக்கத்தில் கழித்து, உஷ்ண காலத்தில் விழித்து வெளியில் சஞ்சரிக்கும்.

வெளவால் மனிதர்களைக் கண்டு அஞ்சும். ஆனால் உஷ்ணப் பிரதேசங்களில் 'வம்பயர்' என்றழைக்கப் படும் ஒருவித வெளவால் உண்டு. அது மனிதர்களையும், மிருகங்களையும் எதிர்க்கும் வல்லமையுடையது. அது இரத்தத்தைக் குடித்து உயிர் வாழும் தன்மை உடையது. மனிதன் தூங்கும்போது அவன் கால் பெரு விரலைக் கௌவி இரத்தத்தை உறிஞ்சும். அச் சமயம் அவனுக்கு வேதனை தோன்றாதிருக்கும் பொருட்டுத் தனது இறக்கைகளால் அவன் கால்களை விசுறும். ஆனால் பொழுது புலர்ந்ததும் களைப்பும் பலவீனமும் தோற்றுவதைக் கடியுண்டவன் உணர்கிறான்.

'வம்பயர்' இனத்தைச் சேர்ந்த வேறொரு பிராணி உண்டு. அது பறக்கும் நரி எனப்பட்ட பழந்தின்னும் வெளவால். நமது தேசத்திலும் ஆஸ்திரேலியாக் கண்டத்திலும் அது அதிகம். சில பறக்கும் நரி

களுக்கு இறக்கை இரண்டு அடி நீளமிருக்கும். பறக்கும் நரி கனிவர்க்கங்களை வெகு ஆவலோடு புசிக்கும். சிற்சில சமயங்களில் ஒரு பழ மர முழுவதிலும் பறக்கும் நரிகள் தொங்கிக்கொண் டிருக்கும். தூரத்திலிருந்து பார்ப்பவருக்குக் கருநிறப் பழம் கொத்துக் கொத்தாகத் தொங்குவது போலத் தோன்றும்.

### கேள்விகள்

1. வௌவால் எங்கே வசிக்கும்?
2. வௌவாலுக்கும் பறவைக்குமுள்ள வித்தியாசங்கள் என்ன?
3. வௌவால் பகற்காலத்தில் ஏன் வெளியே வருவதில்லை?
4. வௌவாலின் இரை என்ன? அது எப்பொழுது இரை தேடும்?
5. 'வம்பயர்' என்னும் வௌவால் எவ்விதக் குணமுடையது?
6. 'பறக்கும் நரி' என்பது என்ன? எங்கு அதிகம்? அவைகளால் தோட்டக்காரர்களுக்கு ஏற்படும் கஷ்டம் என்ன?

### பயிற்சி

1. வேளை, வேலை——அர்த்த வித்தியாசம் என்ன?
2. அங்குமிங்கும், இரை தேடி, வருஷம் முழுவதும், வேறொரு, சிற்சில சமயங்களில்——சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
3. கண்டஞ்சும்——பதம் பிரித்து எழுது.
4. செங்குத்துக் கோடு இட்ட இடங்களில் தகுந்த மெய்யெழுத்துக்களை அமைத்து எழுது:

கொத்து | கொத்தாக, இனத்தை | சேர்ந்த, பக்ஷியை | போல்

### இலக்கணம்

மாலை வேளையில் வௌவால் அங்குமிங்கும் பறந்து செல்லும்.—இந்த வாக்கியத்திலுள்ள வினைச் சொற்கள் எவை? 'செல்லும்' என்னும் வினைச் சொல்லின் பொருள் முடிந்து இருப்பதால் அது, வினைமுற்று எனப்படும். 'பறந்து' என்னும் வினைச் சொல்லின் பொருள் முடிவு பெறாததால் அது, எச்ச வினை எனப்படும். 'பறந்து' என்னும் எச்சவினை 'செல்லும்' என்னும் வினை

முற்றைக்கொண்டு முடிவதால் அது 'வினையெச்சம்' என்று சொல்லப்படும்.

இங்கே வந்த மனிதன் ஊருக்குப் போனான்.——இந்த வாக்கியத்திலுள்ள எச்சவினை எது? வந்த என்னும் எச்சவினை 'மனிதன்' என்னும் பெயரைக் கொண்டு முடிவதால் 'பெயரெச்சம்' என்று சொல்லப்படும்.

கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள பெயரெச்சம், வினையெச்சம், வினைமுற்று இவைகளைக் குறிப்பிடு:—

வௌவால் இரைதேடித் திரியும். இது நான் படித்த புத்தகம்.

---

# 20. கடற்காற்று

| | | |
|---|---|---|
| நிதம் | நேசன் | காத்திடு |
| புகழும் | உளம் | இன்ப வாழ்வு |
| உவந்து | களிப்பு | அளிப்பாய் |
| பிணி | திரட்டி | அல்லல் |
| நீக்கிடு | கருணை | அரிய |

உலக மெல்லாம் நிதம்புகழும்
உடற்கினிய காற்றே
உவந்தெழுந்தெனை நோக்கி
ஓடி வருங் காற்றே. 1

நிலத்திலுறு பிணியை யெல்லாம்
நீக்கிடுவாய் காற்றே
நின்னைப்போ லிவ்வுலகில்
நேசருண்டோ காற்றே? 2

உடற்கினிய புத்துயிரை
ஊட்டிடுவாய் காற்றே
உளமெல்லாம் களிப்பெழுவே
உதவிடுவாய் காற்றே. 3

கடலலையைத் திரட்டிவந்து
கரைசேர்க்கும் காற்றே
கருணை யுடனிவ் வுலகைக்
காத்திடுவாய் காற்றே. 4
எல்லையில்லாக் கடல் தாண்டி
யிங்கே வரும் காற்றே
இன்ப வாழ்க்கை எத்தினமும்
எனக்களிப்பாய் காற்றே. 5
அல்லலெல்லாம் நீக்கி யென்னை
ஆளாக்கும் காற்றே
அரிய புகழ் உன்னைப் போல்
அடைந்தவர் யார் காற்றே? 6

வித்வான் திரு. எஸ். உமைதாணுப்பிள்ளை.

### கேள்விகள்

1. கடற்காற்று எவ்விதம் இன்பமூட்டுகிறது ?
2. காற்று கடல் மீதாக வரும்பொழுது என்ன வேலை செய்கிறது ?
3. கடற்காற்றை எல்லோரும் புகழ்வது ஏன் ?

### பயிற்சி

1. புகழும், நேசன், இன்ப வாழ்வு—எதிர்ப்பதம் எழுது..
2. கரை, கறை—அர்த்த வித்தியாசம் என்ன ?
3. காற்று வீசுகிறது.——இந்த வாக்கியம் என்ன காலத்தில் இருக்கிறது ? இதை மற்ற இரண்டு காலங்களிலும் எழுது.

### இலக்கணம்

'அலையை' இதில் 'ஐ' பெயர்ச்சொல்லை ஒட்டி வந்துள்ளது; 'ஐ' இடைச்சொல். தனித்து வராமல் பெயர்ச் சொல்லையும் வினைச் சொல்லையும் ஒட்டி வருவது இடைச்சொல் எனப்படும்.

இவ்வுலகம்——'இ' இடைச் சொல்.

போல், உம் என்னும் இடைச் சொற்களை ஏற்றவாறு மொழிகளுடன் கூட்டி வாக்கியங்களில் அமைத்து எழுது.

# 21. என் பிரயாணம்

| | | |
|---|---|---|
| ஸ்தலம் | வரலாறு | யாத்திரை |
| அடிவாரம் | பிரயாணம் | இயற்கை |
| கல்வி | அடித்தலம் | புலப்படுகின்றன |
| தவழ்ந்து | கவர்கின்ற | துரை |
| மொய்த்தன | கூச்சமாய் | சமாளித்து |
| திவலைகள் | ரம்மியமான | விடுதிகள் |

நான் பல ஸ்தலங்களுக்குச் சென்று, அந்தந்த ஸ்தலத்தின் வரலாறும் சரித்திர சம்பந்தமான விஷயங்களும் அறிந்துகொண்டு, திருநெல்வேலிக்கு வந்தேன். திருநெல்வேலியிலிருந்து பாபநாசம் போக நினைத்தேன். பாபநாசம் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள யாத்திரை ஸ்தலங்களுள் ஒன்று. அது பொதிகைமலை அடிவாரத்தில் தாமிரபரணி நதிக்கரையில் இருக்கிறது. அம்பாசமுத்திரத்திலிருந்து பாபநாசத்திற்கு ஐந்து அல்லது ஆறுமைல் தூரம் இருக்கும். திருநெல்வேலியிலிருந்து ரயிலில் அம்பா சமுத்திரம் சென்று, அங்கிருந்து பஸ்ஸில் பாபநாசம் செல்லலாம். அல்லது, திருநெல்வேலியிலிருந்தே பஸ் மூலம் பாபநாசத்திற்குச் செல்லலாம்.



பாபநாசம்

நான் திருநெல்வேலியிலிருந்து பஸ்மூலம் பாப நாசத்திற்குப் பிரயாணம் செய்தேன். வழியில், விக் கிரம சிங்கபுரம் என்னும் ஊர் பாபநாசத்திற்குச் சமீபமாக உள்ளது. அது பொதிகைமலை அடியி லிருந்து சுமார் ஒரு மைல் தூரத்திலிருக்கிறது.

விக்கிரம சிங்கபுரத்திலிருந்து சிறிது தூரத்தில் நூல் நூற்கும் இயந்திரசாலை ஒன்று இருக்கிறது.

பாபநாசம் இயற்கையழகு நிரம்பிய இடம். அங்குள்ள கோயிலைச் சுற்றிலும் சத்திரங்களும், மடங்களும், சில கடைகளும் இருக்கின்றன. குரங்கு கள் தத்தம் குட்டிகளுடன் அங்குமிங்கும் செல்வ தும், ஏமாந்து நிற்பவர்களின் பொருள்களைக் கௌவிக்கொண்டு செல்லும் காட்சியும் வேடிக்கை யாக இருந்தன. குரங்குகள் கடைப்பக்கம் வந்தால் அவைகளைத் துரத்தும் பொருட்டுக் கடைக்காரர்கள் நீண்ட கோல்களைப் பக்கத்தில் வைத்துக்கொண் டிருந்தார்கள்.

கோயிலின் முன்புறமாக நதி ஓடுகிறது. தரை மட்டத்திலிருந்து நதி ஆழத்தில் பாய்வதால் பல படிகள் கட்டப்பட்டுள்ளன. தண்ணீர் மிகவும் தெளிவாய் இருக்கிறது அடித்தலத்திலுள்ள கற்க ளும் மண்ணும் தெளிவாகப் புலப்படுகின்றன. தண்ணீர் பாறைகளில் தவழ்ந்து ஓடும் அழகும், தண்ணீரில் பலவகையான பருத்த மீன்கள் தவழும் அழகும் கண்களைக் கவர்கின்றன. சிலர் அவல் முதலியவற்றைத் தண்ணீரில் தூவினர்; அவற்றைத் தின்னக்கூடிய மீன்கள் துள்ளி விழுந்து புரண்டு நெளிந்து சென்ற காட்சியைக்கண்டு மகிழ்ந்தார்கள். அத்துறையில் மீன்களைப் பிடித்தல் கூடாதாம். நான் நதியில் ஸ்நானம் செய்ய இறங்கினதும் மீன்

கள் வந்து மொய்த்தன. எனக்குக் கூச்சமாய் இருந்தது. நான் ஒருவாறு சமாளித்துக் கொண்டு ஸ்நானம் செய்து கரையேறினேன்.

பாபநாசத்திலிருந்து பழைய பாபநாசம் என்னும் இடத்திற்குச் சென்றேன். அங்கு ஒரு சிறிய நீர்வீழ்ச்சி விழுகிறது. அங்கிருந்து கல்யாண தீர்த்தம் என்னும் இடத்திற்குச் சென்றேன். வழியில் சிறிது தூரம் ஒரடி அகலமுள்ள ஒரு பாதையின் மீதாகச் செல்ல வேண்டியிருக்கிறது. ஒரு புறம் உயரமான பாறை; மற்றொரு புறம் பள்ளமான இடம். அக்குறுகிய பாதையில் செல்லும் பொழுது சிறிது பயமாகவே இருந்தது.

கல்யாண தீர்த்தத்தில் ஏற்பட்டுள்ள நீர்வீழ்ச்சி தடாகம் போன்ற இடத்தில் விழுகிறது. அந்த நீர்வீழ்ச்சிலிருந்து கிளம்பும் திவலைகள் வெகு தூரம் வரைச் சிதறி வருகின்றன.

கல்யாண தீர்த்தத்திலிருந்து திரும்பிப் பாபநாசம் வந்து, மத்தியான போஜனம் அருந்திவிட்டு, பஸ் ஏறிச்சென்று காரியார் அணைக்கட்டைப் பார்த்தேன். அந்த அணைக்கட்டு தாமிரபரணியில் கட்டப்பட்டுள்ள மற்ற எல்லா அணைக்கட்டுகளையும் விட மிகப்பெரியது. அது சமீபகாலத்தில் கட்டி முடிக்கப்பட்டது. அந்த அணைக் கட்டிலிருந்து பெரிய குழாய்களின் மூலம் தண்ணீரைக் கொண்டு வந்து, மின்சாரம் உற்பத்தி செய்கிறார்கள். பஸ் செல்லும் பாதை மலைச் சரிவில் வளைந்து வளைந்து செல்லுகிறது. பாறையின் ஒரு புறம் உயரமான மலைகள்; மற்றொரு புறம் பள்ளத்தாக்கான இடம். பாதையின் இருபுறங்களிலுள்ள காட்சிகள் மிகவும் ரம்மியமாக இருக்கின்றன. (லோயர் டாம்) கீழ் அணை ஓட்டன்தாவளம் என்னு

மிடத்தில் மின்சார உற்பத்திச் சாலைகளும், அது சம்பந்தமான வேலைகளையும், அணைக்கட்டு சம்பந்த மான வேலைகளையும் கவனிக்கும் உத்தியோகஸ்தர் கள், வேலையாட்கள் முதலியவர்களது விடுதிகளும் இருக்கின்றன.

அணைக்கட்டைப் பார்த்துவிட்டுப் பாபநாசம் வந்தேன். பாபநாசத்திலிருந்து அம்பாசமுத்திரம் சென்று, அங்கிருந்து குற்றாலம் போக உத்தேசித் திருக்கிறேன்.

### கேள்விகள்

1. பாபநாசம் எங்கே இருக்கிறது?
2. அங்குப் பாயும் நதியின் தோற்றத்தைப் பற்றிக் கூறு.
3. பாபநாசத்திலிருந்து பாபநாசம் அணைக்கட்டுக்குச் செல் லும்பொழுது காணக்கூடிய காட்சிகளை விவரி.

### பயிற்சி

1. அடிவாரம், பொய்த்தன, ரம்மியமாக—சொந்த வாக்கி யங்களில் அமைத்து எழுது.
2. கரை, கறை; துரை, துறை—அர்த்த வித்தியாசம் என்ன?
3. இயற்கை, நீண்ட, முன்புறம்—எதிர்ப் பதங்களை எழுது.
4. பிடிப்பதில்லை—பிரித்து எழுது.
5. நீ செய்த ஏதாவது ஒரு பிரயாணத்தைப்பற்றிச் சில வாக்கியங்கள் எழுது.

### இலக்கணம்

நனி பேதை. சாலப் பேசினான்.—நனி என்பது அதற்குப் பின் வந்துள்ள பெயரின் குணத்தையும், சால என்பது அதற்குப் பின் வந்துள்ள வினையின் குணத்தையும் காட்டுகின்றன.

இவ்விதம் பெயர் வினைகளின் தன்மையை அல்லது குணத்தை உணர்த்தும் சொற்களுக்கு உரிச்சொல் என்பது பெயர்.

'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' இந்த வாக்கியத்தி லுள்ள உரிச்சொல் எது?

———

## 22. மூவரும் ஒன்று சேர்ந்து வாருங்கள்

| | | |
|---|---|---|
| போக்கு வரவு | பெரும்பாலான | விடைபெற்று |
| தத்தம் | பத்திரமாக | காலைக் கடன் |
| அஜாக்கிரதை | சேகரி | உரக்க |
| திகைத்து | எம்மவன் | இரவல் |
| வாய்ச்சண்டை | ஏமாந்து | சிறை |

காட்சி 1

இடம் : முத்தன் வீட்டுத்திண்ணை.

காலம் : மாலை வேளை.

பாத்திரங்கள் : முத்தன், பொன்னன், இருளன்.

[முத்தன் வீட்டுத் திண்ணையில் முத்தனும் பொன்னனும் உட்கார்ந்து இருக்கிறார்கள். இருளன் வருகிறான்.]

இருளன் : பொன்னா! நாளை வள்ளியூரில் தேரோட்ட விழா ஆயிற்றே. அதைப் பார்க்கப் போவோமா?

முத்தன் : போகலாம். ஆனால், இப்பொழுது அந்த ஊருக்குப் போக பஸ்ஸில் இடம் கிடையாது.

பொன்னன் : வள்ளியூர் இங்கிருந்து எவ்வளவு தூரம் இருக்கும்?

இருளன் : சுமார் 18 மைல் தூரம் இருக்கும்.

பொன்னன் : பதினெட்டு மைல் தூரம் இருக்குமா? நான் அந்த ஊருக்குப் போனதே கிடையாது. பஸ்ஸில் இடம் கிடைக்காவிட்டால் என்ன செய்வது?

இருளன் : நாம் பஸ்ஸைக் கவனிக்க வேண்டாம். பதினெட்டு மைல் தூரம் நம்மால் நடக்க முடியாதா? நாம் காலையில் 4 மணிக்குப் புறப்பட்டு நடந்து போனால் 10 மணிக்கு வள்ளியூர் போய்ச் சேரலாம்.

**பொன்னன் :** முத்தா, நீ என்ன சொல்லுகிறுய்? உன்ஞல் வள்ளியூருக்கு நடந்து வரமுடியுமா?

**முத்தன் :** முடியாமல் என்ன? இப்பொழுதல்லவா பஸ் போக்குவரத்து ஏற்பட்டிருக்கிறது? பஸ் போக்குவரவு ஏற்படுவதற்கு முன்ஞல் பெரும்பாலான ஜனங்கள் நடந்துதானே போஞர்கள். ஏன் இப்பொழுதும் எத்தனேயோ பேர் இவ்வூரிலிருந்து வள்ளியூருக்கு நடந்து போகிருர்கள். நான் கூட சென்றவருஷம் அவ்வூருக்கு நடந்துதான்போனேன்.

**பொன்னன் :** சரி. நாளே நாம் மூவரும் காலே 4 மணிக்குப் புறப்பட்டுப் போவோம்.

[இருளனும் பொன்னனும் முத்தனிடம் விடைபெற்றுக் கொண்டு, தத்தம் வீட்டிற்குச் செல்லுகிருர்கள்.]

## காட்சி 2

**இடம் :** ரஸ்தா.

**காலம் :** காலே 7 மணி.

**பாத்திரங்கள் :** முத்தன், பொன்னன், இருளன்.

[முத்தன் பொன்னன், இருளன் மூவரும் ரஸ்தாவின் வழியாக நடந்து செல்லுகிருர்கள். வழியில் ஒரு பணப்பையைக் காண்கிருர்கள்.]

**பொன்னன் :** அதோ, ஒரு பணப்பை கீழே கிடக்கிறதே!

[முத்தன் ஓடிச் சென்று பணப்பையை எடுக்கிருன்.]

**இருளன் :** அதைத்திற, உள்ளே என்ன இருக்கிறது என்று பார்ப்போம்.

[முத்தன் பணப்பையைத் திறக்கிருன்.]

**இருளன் :** ஆ! எத்தனே நோட்டுகள்! எல்லாம் நூறு ரூபாய் நோட்டுகள் போல் அல்லவா காணப்படுகின்றன!

**முத்தன் :** ஆம்.

**பொன்னன் :** முத்தா, அந்த நோட்டுகளை வெளியே எடுத்து எண்ணு, எத்தனை நோட்டுகள் இருக்கின்றன என்று பார்ப்போம்.

**இருளன் :** இப்போது வேண்டாம். யாரேனும் இவ்வழியே வந்தால் பார்த்துக்கொள்வார்கள். நாம் ஊருக்குப் போனவுடன் பணத்தை மூவரும் பிரித்துக் கொள்வோம்.



**பொன்னன் :** யாருடைய பணமோ?

**இருளன் :** யாருடைய பணமானால் என்ன? நாம் திருடினோமா? தானாக வந்த செல்வத்தை வேண்டாமென்று உதைத்துத் தள்ளுவார் உண்டா?

**பொன்னன் :** முத்தா, பணப்பையைப் பத்திரமாக வைத்திரு. அதை என்ன செய்யவேண்டுமென்பதைப்பற்றி பிறகு யோசித்துக் கொள்வோம்.

[மூவரும் வழிநடந்து செல்லுகிறார்கள். ரஸ்தாவின் ஓரமாகவுள்ள ஒரு பலகாரக் கடையண்டை வருகிறார்கள்.]

## காட்சி 3

இடம் : பலகாரக்கடையின் முன்புறம்.

காலம் : காலை 8 மணி.

பாத்திரங்கள் : முத்தன், பொன்னன், இருளன், பலகாரக் கடைக்காரன்.

பொன்னன் : முத்தா ! மணியோ எட்டாகிறது. பசி எடுத்து விட்டது. அதோ சிறிது தூரத்தில் காணப்படும் குளத்திற்குச்சென்று காலைக்கடன்களை முடித்துக்கொண்டு வருவோம். பிறகு இக்கடையில் பலகாரம் தின்றுவிட்டுப் போவோம்.

இருளன் : சரி, அப்படியே செய்வோம். எனக்கும் பசி அதிகமாவே யிருக்கிறது. சரி ; பையை என்ன செய்வது ? இங்கே குரங்குகள் ஏராளமாகக் காணப்படுகின்றன. நாம் அஜாக்கிரதையாக இருந்தால் குரங்குகள் பையைத் தூக்கிக்கொண்டு போய் விடும்.

பொன்னன் : என்னுடைய துணிப்பையில் அந்தப் பணப்பையையும் மற்றச் சாமான்களையும் வைத்துக்கட்டி, இந்தக் கடைக்காரரிடம் கொடுத்து விட்டுக் குளத்திற்குப் போய்வருவோம்.

முத்தன் : சரி. அப்படியே செய்வோம்.

[பொன்னனுடைய துணிப்பையில் பணப்பையையும் மற்றச் சாமான்களையும் வைத்துக் கட்டுகிறார்கள். அதை எடுத்துக் கொண்டு கடைக்காரனிடம் செல்லுகிறார்கள்.]

முத்தன் : ஐயா, கடைக்காரரே, நாங்கள் அந்தக் குளத்திற்குச் சென்று காலைக் கடன்களை முடித்துக் கொண்டு வருகிறோம். அதுவரை நீர் தயவுசெய்து இந்தப் பையை வைத்திரும். நாங்கள் மூவரும் வந்து கேட்கும் பொழுது கொடும்.

கடைக்காரன் : ஆகட்டும்.

[பையை வாங்கி ஒரு மூலையில் வைக்கிறான்.]

இருளன் : ஐயா, இங்கே குரங்குகள் அதிகம் இருக்கின்றன. அவை பையைத் தூக்கிக்கொண்டு போய்விடாமல் கவனித்துக் கொள்ளும்.

கடைக்காரன் : நான் இங்கே கம்பும் கையுமாக இருக்கிறேனே. குரங்குகள் இந்தப் பக்கமே வாரா, பை பத்திரமாய் இருக்கும்.

[மூவரும் குளத்திற்குச் செல்லுகிறார்கள் ; குளக்கரையில்.]

பொன்னன் : ஆ, எவ்வளவு நாவல் பழங்கள் உதிர்ந்து கிடக்கின்றன! மரத்திலும் ஏராளமான நாவல் பழங்கள் இருக்கின்றன! ஒரு பை இருந்தால், நாவல் பழங்களை அதில் போட்டுக்கொண்டு போகலாமே.

முத்தன் : அதற்கென்ன, கடையிலிருந்து ஒரு பையை வாங்கிக் கொண்டு வந்து அதில் பழங்களைப் போட்டுக் கொள்வோம். இருளன், நீ கடைக்குப் போய் ஒரு பை வாங்கிக்கொண்டுவா. நாங்கள் பழங்களைச் சேகரிக்கிறோம்.

[இருளன் கடைக்குப் போகிறான்.]

இருளன் : ஐயா, கடைக்காரரே, அந்தப் பையைக் கொடும்.

கடைக்காரன் : மற்ற இருவரும் எங்கே? மூவரும் வந்து கேட்டால் அல்லவோ அந்தப் பையைக் கொடுக்க வேண்டும்?

இருளன் : மற்ற இருவரும் நாவல் பழங்கள் சேகரிக்கிறார்கள். அப்பழங்களைப் போடப் பை

வேண்டியிருக்கிறது. அவர்கள்தான் பையை வாங்கி வரச் சொன்னார்கள்.

['ஏ, பொன்னு!, ஏ, முத்தா!' என்று உரக்கக் கூப்பிடுகிறான். அவர்கள் கடைப்பக்கம் பார்க்கிறார்கள்.]

கடைக்காரன் : என்ன. பை வேண்டுமா? கொடுக்கவா? (பொன்னனும் முத்தனும் "ஆம், கொடுத்தனுப்புங்கள்" என்கிறார்கள்.)

[கடைக்காரன் இருளனிடம் பையைக்கொடுக்கிறான். இருளன் பையுடன் திரும்புகிறான்.]

இருளன் : (தனக்குள்) நமக்கு வீடு வாசல் இல்லை, மனைவி மக்கள் இல்லை. எத்தனை நாள் கூலி வேலை செய்து வயிறு பிழைப்பது? பணப்பையில் பணம்



ஏராளமாக இருக்கிறது. காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளவேண்டும். இந்தப் பணத்தைக் கொண்டு தூரதேசம் சென்று சுகமாய் வாழ்வோம். (மறைந்து விடுகிறான்.)

[இருளன் திரும்பி வராமையால் பொன்னனும் முத்தனும் திகைத்துக் கடைக்கு வருகிறார்கள்.]

முத்தன் : ஐயா, கடைக்காரரே. எம்மவன் எங்கே?

கடைக்காரன்: பையை வாங்கிக்கொண்டு உங்களிடம் வந்தானே.

முத்தன்: ஆ! அப்படியா? நாங்கள் மூவரும் வந்து கேட்டால் அல்லவோ கொடுக்க வேண்டும்? ஒருவன் வந்து கேட்டதும் ஏன் கொடுத்தீர்?

கடைக்காரன்: பை வேண்டுமா? கொடுக்கவா? என்று கேட்டபொழுது, நீங்கள் இருவரும் 'கொடுத்து அனுப்புங்கள்' என்று கூறினீர்களே!

முத்தன்: ஐயா, நாங்கள் ஏதாவது ஒரு பையைச் சிறிது நேரத்திற்கு உம்மிடம் இரவல் கேட்டு அனுப்பினோம்.

பொன்னன்: எங்கள் மூவருக்கும் சொந்தமான பொருள்களும் பணமும் அந்தப் பையில் இருந்தன. அதை இருளன் எடுத்துக்கொண்டு போய்விட்டான்.

கடைக்காரன்: இதெல்லாம் எனக்கு எப்படித் தெரியும்? நீங்கள் கொடுக்கச் சொன்னீர்கள். நான் கொடுத்தேன்.

[பேச்சு வளர்கிறது. வாய்ச்சண்டை கைச்சண்டை ஆகும் சமயம் ஒரு பெரியவர் அவ்வழியே வருகிறார். அவரிடம் கடைக்காரன் நடந்த விவரங்களைக் கூறுகிறான். அவர் நடந்ததை உணர்கிறார்.]

பெரியவர்: (முத்தனையும் பொன்னனையும் நோக்கி) நீங்கள் கடைக்காரரிடம் பையைக் கொடுக்கும்போது என்ன சொன்னீர்கள்?

முத்தன்: நாங்கள் மூவரும் வந்து கேட்கும் பொழுது பையைக் கொடும் என்றோம்.

பெரியவர்: (கடைக்காரனைப்பார்த்து) அவ்விதம் சொன்னது உண்மைதானா?

கடைக்காரன்: ஆம், ஆனால் இவர்களுடன் வந்த ஒருவன் வந்து பை கேட்க, நான் பையைக் கொடுக்

கவா என்று கேட்டேன். இவ்விருவரும் 'கொடுத்து அனுப்புங்கள்' என்றூர்கள். ஆதலால், நான் பையை அவனிடம் கொடுத்து அனுப்பினேன்.

பெரியவர் : (முத்தனையும் பொன்னனையும் நோக்கி) நீங்கள் மூவரும் ஒன்று சேர்ந்து வாருங்கள். அப்பொழுது கடைக்காரர் உங்களது பையைக் கொடுப்பார். அதுதான் நியாயம்!

[முத்தனும் பொன்னனும் ஏமாந்துபோய் ஊருக்குத் திரும்புகின்றனர். பையை எடுத்துச் சென்ற இருளன் மறைவான ஓரிடத்தில் உட்கார்ந்து பணப்பையைத் திறக்கிருன். இரண்டு போலீஸ்காரர்கள் அவ்விடம் வருகிருர்கள். இருளன் மீது சந்தேகம்கொண்டு அவனைப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகிருர்கள். இருளன் திருடினதாக அவன்மீது குற்றம் சாட்டப்படுகிறது. அவன் சிறையில் அடைக்கப்படுகிருன்.]

### கேள்விகள்

1. மூவரும் எவ்வூருக்குப் பிரயாணமானுர்கள்?
2. வழியில் எதைக் கண்டெடுத்தார்கள்?
3. இருளன் பணப்பையை எவ்விதம் கைப்பற்றினுன்?
4. இருளன் அடைந்த தண்டனை என்ன?
5. இப்பாடத்திலிருந்து நீ அறியும் நீதி என்ன?

### பயிற்சி

இருளன் பணப்பையைத் திறப்பது—போலீஸ்காரர்கள் வருவது—இருளன் நியாய ஸ்தலத்தில் விசாரிக்கப்பட்டுத் தண்டனை அடைதல்—இவற்றை நாடகமாக நடித்துக் காட்டுக.

### இலக்கணம்

தமிழ்ப் பாஷையில் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும் நான்குவகைச் சொற்கள் உண்டு.

இராமனும் கிருஷ்ணனும் கடையில் சிவப்பு நூல் வாங்கினுர்கள்.—இந்த வாக்கியத்திலுள்ள பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல் உரிச்சொல் இவைகளைக் குறிப்பிடு.

---



## 23. ஸர் ஸயத் ஆமத் கானின் பாலிய நினைவு

| | | |
|---|---|---|
| நூற்ருண்டு | தீவிர முயற்சி | செய்தி |
| உத்தியோகம் | ஸ்தாபிக்க | மன்னிப்பு |
| சாமர்த்தியம் | கலை | அகந்தை |
| நியமனம் | நன்னடத்தை | ஒடுக்கப்பட்டது |
| சர்க்கார் | உத்தமமான | கீழோர் |
| பரிசில்கள் | குர்ஆன் | சம்பவம் |
| சால | அனுமதி | ஆயுட்காலம் |

சென்ற நூற்ருண்டில் வாழ்ந்த ஸர் ஸயத் ஆமத் கான் என்னும் முகம்மதியப் பெரியாரைப் பற்றி உங்களில் சிலர் கேள்விப்பட்டிருக்கலாம். அவர் வாழ்ந்த காலத்தில் இங்கிலாந்தை விக்டோரியா

மகாராணியார் ஆண்டு வந்தார். ஸர் ஸயத் ஆமத் கான் 1817-ல் டில்லியில் ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்தவர். முதலில் சிரஸ்தார் உத்தியோகத்தில் அவர் அமர்ந்தார். பின்னர், தமது சாமர்த்தியத்தாலும் முயற்சியாலும் படிப்படியாக மேலான உத்தியோகங்களைப் பெற்றுக் கடைசியில் ஜட்ஜாக (நியாயாதிபதி) நியமனம் பெற்றார்.

ஸர் ஸயத் ஆமத்கான் பிஜ்னூரில் முனிசீபாக உத்தியோகம் பார்த்து வந்த காலத்தில் நாட்டில் சிப்பாய்க் கலகம் ஏற்பட்டது. அக்கலகத்தை. அடக்குவதற்கு ஆமத்கான் சர்க்காருடன் ஒத்துழைத்தார். ஆதலால் அவருக்குப் பல பரிசில்கள் அரசாங்கத்தாரால் கொடுக்கப்பட்டன.

ஸர் ஸயத் ஆமத்கான் கல்வியின் பொருட்டுச் சால உழைத்தார். அவருடைய தீவிர முயற்சியால் ஐக்கிய மாகாணங்களிலுள்ள அலிகார் என்னுமிடத்தில் முகம்மதியர்களுக்கு ஒரு காலேஜ் ஸ்தாபிக்கப்பட்டது. "மனிதர் சௌக்கியமாக வாழ விரும்பினால், அவர்கள் தங்கள் குழந்தைகளைக் கல்வி கற்று வரச் செய்யவேண்டும்" என்று ஆமத்கான் முகம்மதியர்களுக்கு அடிக்கடி எடுத்துரைத்து வந்தார். தவிர, அவர், 'ஒருவர் பல கலைகளைப் பயின்றால் மட்டும் போதாது, நன்னடத்தையுள்ளவராகவும், உத்தமமான நல்ல செய்கைகளைச் செய்பவராகவும் இருக்கவேண்டும்" என்றும் கூறிவந்தார்.

அவர் தம்மைத் தம் தாயார் எவ்விதம் வளர்த்து வந்தார் என்பதைப்பற்றி அடிக்கடி கீழ்க்கண்டவாறு கூறுவதுண்டு:

"நான் சிறு வயதில் மற்ற முகம்மதியச் சிறுவர்களைப்போல் குர்-ஆனைக் கற்றதுடன், வேறு பல

பாஷைகளையும் கற்று வந்தேன். ஒவ்வொரு நாள் இரவிலும் என் தாயார் என் அருகில் உட்கார்ந்து நான் அன்று பள்ளிக்கூடத்தில் படித்த பாடங்களைப் படித்து ஒப்புவிக்கும்படிச் செய்வாள்.

என் தாயார் எனக்குக் கல்விப் பயிற்சி அளித்து வந்ததுடன், நான் நல்வழிப்படுவதற்கான பயிற்சியையும் எனக்கு அளித்து வந்தாள். ஒரு சமயம் என் வீட்டிலிருந்த வேலையாட்களில் ஒருவன் நான் இட்ட வேலையைச் செய்யவில்லை. உடனே நான் கோபங்கொண்டு அவனை அடித்துக் கொண்டிருந்தேன். அச்சமயம் என் தாயார் அங்கு வந்தாள். என் செய்கையைக் கண்ட என் தாயார், என் மீது கோபங்கொண்டு வேலைக்காரனை அடித்தல் கூடாது என்று கூறினாள். நான் அவ்விதம்தான் அவனை அடிப்பேன் என்று சொல்லவே, அவள் நான் அந்த வீட்டை விட்டு வெளியே போகவேண்டுமென்று கூறிவிட்டாள். ஆகையால், நான் அந்த வீட்டை விட்டு வெளியேறி டில்லியில் மற்றோர் புறத்திலுள்ள என் அத்தை வீட்டுக்குச் சென்றேன்.

என் தாயார் என்னைத் தேடி வேலையாட்களை அனுப்பி நான் என் அத்தை வீட்டில் இருப்பதை அறிந்து கொண்டாள். ஆனால், என்னை வீட்டிற்கு அழைத்து வரும்படி ஒருவரையும் அனுப்பவில்லை.

எனக்கு என் தாயாரைப் பிரிந்திருக்க மனங்கொள்ளவில்லை. நான் வீட்டிற்கு வர அனுமதி கொடுக்கும்படி என் தாயாருக்கு அத்தைமூலம் செய்தி அனுப்பினேன். நான் அந்த வேலைக்காரனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்வதானால்தான் வீட்டுக்கு வரலாம் என்று என் தாயார் பதில் அனுப்பினாள்.

நான் வீட்டிற்குச் சென்று அந்த வேலைக்கார னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டேன். இவ்விதம் என் அகந்தை ஒடுக்கப்பட்டது. எல்லோரிடத்தும் அன்பாய் இருக்கவேண்டும் என்னும் பாடத்தை நான் அறிந்து கொண்டேன்."

மேற்கண்ட சம்பவத்தை ஸர் ஸயத் ஆமத்கான் தம் ஆயுட்காலம் முழுவதும் மறக்கவே இல்லை. அவர் அதை அடிக்கடி பிறரிடம் கூறுவதுண்டு. அவர் 80 வயதுக்கு மேலும் உயிர் வாழ்ந்து, புகழை நிலைநாட்டி மறைந்தார்.

பிள்ளைகளே, நாம் நம்மிலும் தாழ்ந்தோரிட மும் அன்பாய் இருத்தல் வேண்டும் என்பதை ஒரு பொழுதும் மறவாதீர்கள்.

### கேள்விகள்

1. ஸர் ஸயத் ஆமத்கானுக்கு அவருடைய தாயார் எவ்வித மாகக் கல்விப் பயிற்சி அளித்து வந்தார்?
2. ஒரு சமயம் ஸயத் ஆமத்கானை அவருடைய தாயார் வீட்டைவிட்டு வெளியே போகும்படி செய்தது ஏன்?
3. ஆமத்கான் வீட்டுக்குத் திரும்பிவரத் தாயாரிடம் அனு மதிபெற்றது எவ்விதம்?
4. ஆமத்கானுக்குச் சர்க்கார் பல பரிசில்கள் வழங்கக் காரணம் என்ன?
5. ஆமத்கான் கல்வி சம்பந்தமாகச் செய்துள்ள நன்மை என்ன?
6. ஸர் ஸயத் ஆமத்கானது சரித்திரத்திலிருந்து அறிந்து கொள்ளும் நீதிகள் என்ன?

### பயிற்சி

1. படிப்படியாக, ஒரு பொழுதும்—சொந்த வாக்கியத்தில் அமைத்து எழுது.
2. உத்தமம்—எதிர்ப்பதம் என்ன?
3. அளித்து, அழித்து—அர்த்த வித்தியாசம் என்ன?
4. கூறுவதுண்டு—பிரித்து எழுது.

# செய்யுள்

## I. நீதிப் பகுதி

### 1. வெற்றி வேற்கை

#### 1. ஆசிரியரும் கல்வியும்

1. எழுத்தறி வித்தவன் இறைவ னாகும்.
2. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே.
3. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதராகும்மே.
4. நாற்பாற் குலத்தில் மேற்பா லொருவன்
கற்றில னாயின் கீழ்இருப் பவனே.
5. எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை மேல்வருக என்பர்.
6. அறிவுடை யொருவனை அரசனும் விரும்பும்.
7. அச்ச முள்ளடக்கி அறிவகத் தில்லாக்
கொச்சை மக்களைப் பெறுதலி னக்குடி
எச்சமற் றேமாந் திருக்கை நன்றே.

#### 2. நட்பு

1 அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது.
2. சுடினும் செம்பொன் தன்னொளி கெடாது.
3. அரைக்கினும் சந்தனம் தன்மணம் அறாது.
4. புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது.
5. கலக்கினுந் தண்கடல் சேறாகாது.
6. ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.
7. நாறுண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.
8. அடினும்பால் பெய்துகைப் பறாதுபேய்ச்
சுரைக்காய்.
9. ஊட்டினும் பல்விரை உள்ளி கமழாது.

### 3. செல்வம் நிலையாதது

1. உடைமையும் வறுமையுங் ஒருவழி நில்லா.
2. குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந்து ஓர்ஊர் நண்ணினும் நண்ணுவர்.
3. சிறப்பும் செல்வமும் பெருமையும் உடையோர்
அறக்கூழ்ச் சாலை அடையினும் அடைவர்.
4. அறத்திடு பிச்சை கூவி இரப்போர்
அரசோ டிருந்துஅர சாளினும் ஆளுவர்.
5 குன்றத் தனையிரு நிதியம் படைத்தோர்
அன்றைப் பகலே அழியினும் அழிவர்.
6. எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பாழ் ஆயினும் ஆகும்.
7. பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தரும் செறிந்து
நெற்பொலி நெடு நகர் ஆயினும் ஆகும்.

### 2. நல்வழி

#### உயர்குலமும் தாழ்குலமும்

1. சாதி இரண்டொழிய வேறில்லை; சாற்றுங்கால்,
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர்; இடாதார் இழி குலத்தோர்;
பட்டாங்கி லுள்ள படி.

#### தேடுதற்குரிய நல்லொழுக்கம்

2. ஈட்டும் பொருண் முயற்சி யெண்ணிறந்த வாயினுமூழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாம்—தேட்டம்
மரியாதை காணு மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணுந் தனம்.

#### நல்ல குடியில் பிறந்தவரின் குணம்

3. ஆற்றுப் பெருக்கற் றடிசுடும்அந் நாளுமவ்வா(று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்;—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலும்
இல்லையென மாட்டார் இசைந்து.

### உழுதுண்டு வாழ்வது உயர்வாகும்

4. ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும்அன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்(கு) ஒப்பில்லை; கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

### பட்சபாதம் பேசுபவரின் கதி

5. வேதாளம் சேருமே; வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே;—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே; சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை.

### வரவுக்கு அதிகமாகச் செலவுசெய்வோனின்கதி

ஆன முதலில் அதிகம் செலவானால்,
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய், ஏழ்பிறப்பும் தீயனாய்,
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

## 3. வாக்குண்டாம்

### நல்லார் நட்பு

1. நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே;—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோ(டு)
இணங்கி இருப்பதுவும் நன்று.

### தீயார் நட்பு

2. தீயாரைக் காண்பதுவும் தீதே; திருவற்ற
தீயார்சொல் கேட்பதுவும் தீதே; தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே; அவரோடு
இணங்கி இருப்பதுவும் தீது.

### ஒருவரை மதித்தல்

3. மடல்பெரிது தாழை மகிழ்இனிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா;—கடல் பெரிது
மண்ணீரும் ஆகா(து); அதனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும்.

### நல்லாரும் தீயாரும்

4. *சீரியர் கெட்டாலும் சீரியரே; சீரியர் மற்(று)*
*அல்லாதார் கெட்டால் அங்கென்னுகும்?—சீரிய*
*பொன்னின் குடமுடைந்தால் பொன்னுகும்; என்னுகும்*
*மண்ணின் குடமுடைந்தக் கால்?*

### வஞ்சகரின் தன்மை

5. *நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்*
*அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்*
*கரவுடையார் தம்மைக் கரப்பர், கரவார்*
*கரவிலா நெஞ்சத் தவர்.*

### மன்னும் கற்ருேனும்

6. *மன்னனும் மாசறக் கற்ருேனும் சீர்தூக்கின்*
*மன்னனின் கற்ருேன் சிறப்புடையன்;—மன்னற்குத்*
*தன்தேயம் அல்லால் சிறப்பில்லை; கற்ருேர்க்குச்*
*சென்ற இடம் எல்லாம் சிறப்பு.*

## 4. விவேக சிந்தாமணி

### மெய் சொல்வோரும், பொய் சொல்வோரும்

மெய்யதைச் சொல்வ ராகில்
விளங்கிடு மேலு நன்மை,
வையக மதனைக் கொள்வார்;
மனிதரிற் றேவ ராவர்;
பொய்யதைச் சொல்வ ராகில்
போசன மற்ப மாகும்,
நொய்யரி சியர்க ளென்று
நோக்கிடா ரறிவுள் ளோரே.

### துன்பம் அடையும் நால்வர் *(1)*

தந்தையுரை தட்டினவன்,
தாயுரை யிகழ்ந்தோன்,
அந்தமுறு தேசிகர்தம்
ஆணையை மறந்தோன்,

சந்தமுறு வேதநெறி
மாறினவன் நால்வர்
செந்தழலின் வாயினிடை
சேர்வதுமெய் கண்டீர். (2)

வாழ்வின் உயர்வு தாழ்வு

வாழ்வது வந்த போது
மனந்தனின் மகிழ வேண்டாம்,
தாழ்வது வந்த தானல்
தளர்வரோ தக்கோர் மிக்க,
ஊழ்வினை வந்ததானல்
ஒருவரால் விலக்கப் போமோ?
ஏழையா யிருந்தோர்பல்லக்
கேறுதல் கண்டி லீரோ? (3)

## II. கதைப் பகுதி

### 1. தேசிங்கு ராஜன் கதை

தேசிங்குராஜன் செஞ்சியிலிருந்து ஆண்டுவந்தான். அவனுக்கு முன்னிருந்த அரசர்கள் ஆற்காட்டு நவாபுக்குக் கப்பம் கட்டிவந்தனர். தேசிங்கு ராஜன் கப்பம் கட்டவேண்டியதில்லை என்று டில்லி சுல்தான் கூறியிருந்தார். ஆனல், ஆற்காட்டு நவாபு கப்பத்தொகையை வசூல் செய்து வரும்படி தோன்றமல்லன் என்பவனைச் செஞ்சிக்கு அனுப்பினர்: இப்பாடப் பகுதியில் செஞ்சி நகரச் சிறப்பும், தோன்றமல்லனைக் கண்டதும், தேசிங்குராஜன் கோபங்கொண்டதும் கூறப்பட்டுள்ளது.

பணம் கேட்கவந்த தோன்றமல்லனைக் கண்டு

தேசிங்குராஜன் கோபம்கொள்ளுதல்

பல்லைப் பட பட வென்று
கடித்தானையா ராஜாதேசிங்கு;
கையைத் தூக்கிக் கனைத்துத்
தட்டினன் ராஜாதேசிங்கு;

இனியில்லாத கோபமாச்சுது
அந்த ராஜாவுக் கானுலும்
கோபத்தினுலே கட்டியவனைக்
கொல்ல வெழுந்தானும்;

பார்த்தவுடனே தோன்றமல்லனும்
பதைத்து விழுந்தானும்;
விழுந்தவுடனே சலாஞ்செய்து
வேண்டிக்கொண்டானும்;
தலையை யசைத்துத் தோளை
நெறித்தான் ராஜாதேசிங்கு
கண்களை யுருட்டிக் கதும்பினுனையா
காளை சிங்கம்போல.

## 2. காகம் பாம்பைக் கொன்ற கதை

கோடுறு சினையில் காகம் கூடுவைத்(து) அனேககாலம்
பேடொடு கூடி வாழும் பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம் பொன்றங்(கு) அதுபெறும் முட்டை
[யெல்லாம்
நாடியே குடித்துப் போட நலிந்(து) உளம் மெலிந்து
வாடி (1)

தன்னுயிர்ப் பாங்கனுன சம்புகன் அருகுபோயங்கு
என்ன செய்குவன் நானென்ன; இதைக்கொலல்அரிதோ?
நீ போய்
மன்னவன் தேவியாடும் மஞ்சனச் சாலை புக்குப்
பொன்னணி கொண்டுவந்து போடுக பொந்திலென்ன.
(2)

காகமப் படியே செய்யக் காவலன் ஏவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை ஈர்ந்தனர் ; ஈரும் போதில்
நாகமங் கிருந்து சீற, நறுக்கினர் இருதுண் டாக,
ஆகையால் உபாயத்(து) ஆகாத(து) இலையென அறை
யும் பின்னும். (3)

—வீரமார்த்தாண்ட தேவர்

## III. பொறுக்கு மணிகள்

### சத்திரத்தில் சோறுபோடுந் தன்மை

1. கத்துகடல் சூழ்நாகைக் காத்தன்தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசிவரும்—குத்தி
உலையிலிட ஊரடங்கும் ஓரகப்பை அன்னம்
இலையிலிட வெள்ளி யெழும்.

### கறி முதலியன சமைக்கச் சொல்லுதல்

2. சற்றே துவையல்அரை, தம்பி, ஒரு பச்சடிவை,
வற்றல் ஏதேனும் வறத்துவை,—குற்றமிலை
காயமிட்டுக் கீரைகடை; கம்மென வேபிள
காயரைத்து வைப்பாய் கறி.

### தேகப்பயிற்சியின் பலன்

3. சிலம்பம் முதல் மல்யுத்தம், தேசி, நடை கொள்ளின்
பலம் பரவும், மெய் இறுகும், பன்னத்—துலங்கு பசி
உண்டாம், கபவாதமோடும் வலி சூலையும் போம்,
உண்டாம் மனத்திடமும், ஓர்.

### செருப்பின் உபயோகம்

4. கல்லும் உறுத்தாது, காலில் முள் தையாது,
எல்லை மார்த்தாண்டன் சூடேறாது, தொல்லைவரும்
மாலை இருளில் வழிநடக்கக் கூசாது
காலில் செருப்பிருந்தக் கால்

### கற்றவர்முன் கல்லாத மூடர்

காணாமல் வேணதெல்லாம் கத்தலாம்; கற்றோர்முன்
கோணாமல் வாய்திறக்கக் கூடாதே—நாணாமல்
பேச்சுப் பேச்சென்னும் பெரும் பூனை வந்தக்கால்
கீச்சுக் கீச்சென்னுங் கிளி.

---

# செய்யுட் குறிப்புரை

## I. நீதிப்பகுதி

### 1. வெற்றி வேற்கை

இந்நூல் அதிவீர ராம பாண்டியர் என்பவரால் இயற்றப் பட்டது. இவரது காலம் சுமார் 300 வருடங்களுக்கு முன்பு ஆகும். இவர் தென்காசியிலிருந்து சிற்றரசராக ஆண்டு வந்தார். இவரது தமையனுரான வரதுங்கராம பாண்டியர் கரிவலம் வந்த நல்லூரில் அரசராக இருந்துவந்தார். வெற்றி வேற்கை என்னும் நூலுக்கு நறுந்தொகை என்னும் மற்ருெரு பெயரும் உண்டு.

#### 1. ஆசியரும் கல்வியும்

இறைவன் - கடவுள்; கற்கை - படிப்பது; பிச்சைபுகினும் - பிச்சை எடுத்தாலும்; குலநலம் - குலத்தின் பெருமை; அகத்து - உள்ளில்; கொச்சை மக்கள் - அறிவில்லாத பிள்ளைகள்; எச்சம் அற்று - பிள்ளைகள் இல்லாமல்.

#### 2. நட்பு

அடினும் - அடுப்பில் வைத்துக் காய்ச்சினுலும்; குன்ருது - குறையாது; செம்பொன் - உயர்ந்த பொன்; ஒளி - பிரகாசம்; அருது - நீங்காது; காரகில் - கருமையான அகில் கட்டை; பொல் லாங்கு - கெட்ட வாசனை; தண்கடல்-குளிர்ச்சியான கடல்; வீழ்க் கும் - விடும்; ஆண்டு - வருடம்; கைப்பு - கசப்பு; பல்விரை - பல வாசனைகள்; ஊட்டினுலும் - செலுத்தினுலும்.

#### 3. செல்வம் நிலையாமை

உடைமை - செல்வம்; வறுமை - தரித்திரம்; குஞ்சரம் - யானை; நண்ணினும் - அடைந்தாலும்; அறக்கூழ்ச்சாலை - தரும சத்திரம்; குன்றத்தனை - மலையளவு; நிதி - செல்வம்; உக்கு - இடிந்து; பெற்றம் - எருதுகள்; பொற்ருெடி (பொன்+தொடி) பொன் வளையல் அணிந்த; நெற்பொலி - நெல் மிகுந்த; நெடுநகர் - பெரிய ஊர்.

### 2. நல்வழி

இதனை இயற்றியவர் ஔவையார். 'ஔவை' என்னும் பதத் திற்குப் பாட்டி' என்பது பொருள். அவர் பல ஆண்டுகள் வாழ்ந் திருந்த பாட்டியாதலால் அவருக்கு இப்பெயர் வந்தது.

1. சாற்றுங்கால் - சொல்லுமிடத்து; நீதி வழுவா - நீதி தவறாத; நெறி முறையின் - நல்வழியின் முறைப்படி நின்று; மேதினியில் - பூமியில்; இட்டார் - வறியோர்க்குக் கொடுத்தவர்; பட்டாங்கில் உள்ளபடி - உண்மை நூலில் உள்ளவாறு.

2. மகிதலத்தீர் - பூமியிலுள்ளவர்களே; ஈட்டும் - தேடும், சம்பாதிக்கும்; ஊழ் - வினை; தனம் - பொருள்; தரியாது - நிலை பெற்றது இருப்பது இல்லை; தேட்டம் - தேடுதற்கு உரியது; மரியாதை - நல்வழியில் ஒழுகுதல்.

3. பெருக்கு - வெள்ளம்; அடி - பாதம்; உலகு - உலகத்தாரை; நல்கூர்ந்தாராலும் - வறுமையுடையவராலும்; ஏற்றவர்க்கு - யாசிப்பவர்களுக்கு; இசைந்து - மனம் ஒத்து.

4. அரசு - அரசன்; வீற்றிருந்த - பெருமையாக வாழ்கின்ற; விழும் - அழியும்; ஏற்றம் - உயர்வாகும்; பணி - தொழில்; பழுது - அழிவு.

5. மன்று - நியாய சபை; ஓரம் - பட்சபாதம்; வேதாளம் - பேய்; சேடன் - பாம்பு; பாதாளமூலி - நெருஞ்சி; ஆடுதின்னாப் பாளை முதலியன.

6. ஆன - கிடைத்த; மதி - புத்தி, அறிவு; தீயனாய் - தீமையுடையவனாய்; நாடு - ஆராய்ந்து பார்ப்பாயாக; எழுவகைப் பிறப்பு: தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன.

## 3. வாக்குண்டாம்

இந்நூலை இயற்றியவர் ஔவையார். இந்நூலின் கடவுள் வணக்கச் செய்யுள் 'வாக்குண்டாம்' என்று தொடங்குவதால் இந்நூலுக்கு 'வாக்குண்டாம்' என்ற பெயர் ஏற்பட்டது. இந்த நூலுக்கு மூதுரை என்ற ஒரு பெயரும் உண்டு.

'மூதுரை' என்பது பழமொழி. இந்நூல் பெரும்பாலும் பழமொழிகளைத் தழுவி இயற்றப்பட்டிருப்பதால் அப்பெயரும் பொருந்தும்.

1. நன்றே - நன்மையே ஆகும்; நலமிக்க - நன்மை மிகுந்த; இணங்கியிருப்பதும் - சேர்ந்து சிநேகமாயிருப்பதும்.

2. தீயார் - துர்க்குணமுடையவர்; தீதே - தீமையே ஆகும்; திருஅற்ற - அழகைக் கெடுக்கின்ற.

3. மடல் - இதழ்; மகிழ் - மகிழம்பூ; கந்தம் - வாசனை; சிற்றூறல் - சிறிய ஊற்று நீர்.

13

4. சீரிய - மேன்மை பொருந்திய; சீரியர் - நற்குண முடையோர்; மற்று அல்லாதார்-நற்குணமில்லாத தீயகுணமுடையோர்.

5. நாகம் - நல்ல பாம்பு. நஞ்சு - விஷம். கரந்து - மறைந்து, ஒளிந்து; உறையும் - வசிக்கும்; புறம் - வெளியே. நெஞ்சில் கரவுடையார் - மனத்தில் கபடமுடையவர்கள்.

6. மாசற - பிழையில்லாமல்; சீர் தூக்கின் - ஒப்பிட்டுப்பார்த்தால்; சிறப்பு - புகழ்.

## 4. விவேக சிந்தாமணி

இது ஒரு பழைய நூல். இதில் பல நீதிச்செய்யுட்கள் உண்டு. அவை பலபேர் பாடியன.

1. வையகம் - உலகத்தவர்; கொள்வர் - ஒப்புக்கொள்வார்கள்; நொய்யரிசியர்களென்று. (நொய்யரிசி கொதிதாளாது என்னும் பழமொழியைப் போல) பெருந்தன்மையுடையவர்கள் அல்லர் என்று; நோக்கிடார் - கவனிக்கமாட்டார்கள்.

2. உரை - சொல்; தட்டினவன் - தள்ளி நடந்தவன், மீறி நடந்தவன்; இகழ்ந்தோன் - இகழ்ச்சி செய்தவன்; அந்தமுறு - அழகிய; தேசிகர் - குரு; ஆணை - ஆக்ஞை; சந்தமுறு - சந்தமுள்ள.

3. வாழ்வது - நல்ல வாழ்வு; மகிழ - சந்தோஷமடைய; தக்கோர் - மேலானோர்; தளர்வரோ - மனவருத்தம் அடைவரோ; ஊழ்வினை - முன் செய்த வினையால் வரும் செய்கைகள்; விலக்க - தடுக்க; கண்டிலீரோ - பார்த்ததில்லையா.

# II. கதைப் பகுதி

## 1. தேசிங்குராஜன் கதை

'செஞ்சியை ஆண்டு வந்த தேசிங்கு ராஜனைப்பற்றிப் பாடிய கதைக்குத் தேசிங்கு ராஜன் கதை' என்பது பெயர்.

1. சீர் - மேன்மை; எஞ்சல் - குறைவு; எழில் - அழகு, நிரை - வரிசை; மின்னார் - பெண்கள்; வேதியர் - பிராமணர்; பொன்னகர் - அமராவதி.

2. பதைத்து - துடித்து, அஞ்சி; நெறித்தான் - சிலுப்பினான்; கதும்பினான் - உறுமினான்.

## 2. காகம் பாம்பைக் கொன்ற கதை

இந்தக் கதை பஞ்சதந்திரம் என்னும் நூலில் உள்ளது. அந்த நூலை இயற்றியவர் வீரமார்த்தாண்டதேவர். இவர் காலம் இது வென்று திட்டமாகத் தெரியவில்லை.

1. கோதுறு - வளைவு பொருந்திய (வளைந்த); சினை - மரக்கிளை; பேடொடு - பெட்டையோடு; நாடி - தேடி; விரும்பி; நலிந்து - துன்பம் அடைந்து; உளம் - மனம்.

2. தன்னுயிர்ப் பாங்கன் - தன் உயிர்போன்ற தோழன்; சம்புகன் - நரி; அருகு - பக்கம்; மஞ்சனச்சாலை - நீராடுமிடம்; பொன் அணி - பொன்னாலாகிய ஆபரணம்.

3. காவலன் - அரசன்; ஏவலாளர் - வேலைக்காரர்கள்; ஏகி - சென்று; மா - பெரிய; ஈர்ந்தனர் - பிளந்தனர்; இலையென - இல்லை யென்று, அறையும் - சொல்லும்.

## III. பொறுக்கு மணிகள்

1. கத்துகடல் - சப்திக்கின்ற அலைகளையுடைய கடல்; சூழ் - சூழப்பட்ட; அத்தமிக்கும் போதில் - சூரியன் மறையும் வேளையில்; ஊரடங்கும் - ஊரிலுள்ளவர் தூங்குவார்கள்; வெள்ளி யெழும் - சுக்கிரன் உதயமாகும்.

2. சற்றே - சிறிது; காயம் - பெருங்காயம்,

3. தேசி - பெருங்குதிரை; மெய் - தேகம்; பன்ன - சொல்ல; சூலை - ஒரு நோய்; ஓர் - ஆராய்வாயாக.

4. மார்த்தாண்டன் - சூரியன்; தொல்லை - துன்பம்.

5. நாணாமல் - வெட்கம் கொள்ளாமல்.

